# வாராஹி உபாஸனை







உபாஸனாகுலபதி

ஸ்ரீ துர்க்கைச் சித்தர்

ஜெய துர்க்கா

# 1. ப்ரயோக பானகம்

அம்பிகையைப் பூஜை செய்வது பூர்வ புண்ணிய பலத்தினால் வருவது. எங்கும் எதிலும் சக்தியே பிரகாசிக்கிறது. சக்தியை ஒரு இடத்திலேயே நிறுத்தி அதனுடைய பேரருளை கொஞ்சம் கொஞ்சமாகத் தன்வயப்படுத்திக் கொள்வதற்கு உபாஸனை என்று சொல்லலாம். உபாஸகன், உபாஸகனுடைய லட்சணங்கள், அவனுடைய தகுதிகள், இந்த மூன்றும் செம்மையாக இருந்தால் உபாஸனை செழுமையாக இருக்கும்.

## வாராஹி உபாஸனை:

வாராஹி என்றால், ஒரு சிலர் பயப்படுகிறார்கள். வாராஹியைப் போல நேசமும் பாசமும் உடையவள் கிடையாது. உபாஸனையில் ஸித்தி அடைந்தவனுக்கு, அவன் முன்னால் வாராஹித் தாய் நடந்து சென்று, அவனை எப்போதும் பாதுகாத்துக் கொண்டே இருப்பாள். எப்படி துர்க்கையை உபாஸனை செய்தால் பிறப்பு இல்லை என்று சொல்கிறோமோ தப்புக்களும் ஏய்ப்புக்களும் இல்லாமல் வாராஹியை உபாஸனை செய்தால், கண்டிப்பாக மோக்ஷமும் கிடைக்கும்.

வாராஹித் தாயை பல்வேறு வாகனங்களில் அமர்ந்தவளாக த்யானம் செய்வது உண்டு. இந்த மூர்த்தங்களில் 4 மூர்த்தங்கள் சிறப்பானவைகளாக எடுத்துக் கொள்ளப்பெறுகின்றன.

1. சிம்ம வாகனத்தில் அமர்ந்திருக்கும் வாராஹி.
2. மகிஷ (எருமை) வாகனத்தில் அமர்ந்திருக்கும் வாராஹி.
3. புலி மீது அமர்ந்திருக்கும் வாராஹி.
4. பாய்ந்து ஓடும் வெண்குதிரை மீது அமர்ந்திருக்கும் வாராஹி திருக்கோலம்.

இந்த நான்கு திருக்கோலங்களும் நான்கு விதமான பலாபலன்களைத் தருவதாக சித்தர்களாலும், மந்த்ர சாஸ்த்ரங்களாலும் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன.

வாராஹி கல்பம் என்ற நூல் மந்த்ர சாஸ்த்திரத்தில் தலை சிறந்த நூல்களில் ஒன்று. இந்த நூல் வார்ராஹியை பற்றி முற்ற முழுவதுமாக, தெளிவாக எடுத்துப் பேசும். வாராஹியைப் பற்றி பல நூல்களின் உள்ளே சொல்லப்பட்டுள்ளன. அவைகளில் மந்த்ர மஹோததி, மந்த்ர மஹார்ணவம், மந்த்ர கோசம் மற்றும்

பல மந்த்ர சாஸ்த்ர நூல்கள் வாராஹியைத் தொட்டுக் காட்டுகின்றன. ஆனால், வாராஹி கல்பம் மட்டுமே வாராஹியை முற்ற முழுதாக எடுத்துக் காட்டி, அவளுடைய பரிமாணத்தை வெளிப்படுத்துகிறது.

பரமேச்வரனை வடமொழியும் தென்மொழியும், தென்மொழியைச் சொந்தமாக உடையவன் என்று சொல்லும். குர்ஆனை முற்ற முழுதுமாகப் படிக்க வேண்டும் என்று சொன்னால், அதற்கு அராபிய மொழி துணை தேவை; மற்ற மொழிபெயர்ப்புகளில் விட்டவைகளை அங்கே பிடித்து விடலாம். இதைப் போலவே பைபிளின் மூலத்தை தெரிய வேண்டும் என்று சொன்னால், லத்தீன் மொழி அறிவு அவசியம். இதைப் போலவே வாராஹியைப் பற்றிய மூல அறிவு பெற வேண்டும் என்றால், வடமொழி அறிவு தேவை.

தற்காலத்தில் வரும் நூல்கள் எல்லாம், ஒருவர் சொன்னதை கொஞ்சம் மாற்றியும், வேறு ஒருவர் அதில் சொன்னதை பிழை என்று மாற்றியும், மற்றும் சில நூல்கள் புதிதாக ஒரு செய்தியைச் சொல்லியும் படிப்பவர்களையும் படித்துக் கேட்பவர்களையும் ஒரு புரட்டு புரட்டி எடுத்துவிடும். வாசகர்கள் ப்ரும்மாவும், விஷ்ணுவும், சிவ பெருமானின் அடிமுடி தேடிச் சென்ற கதையாக, மூலத்தையும் அர்க்கத்தையும், அதாவது அடியையும் முடியையும் காணமுடியாது திக்குத் திணறச் செய்து விடும். உங்களில் பலருக்கு இந்தச் செய்தி தெரிந்திருக்கும்.

தலையாய 5 கவ்யங்களை பஞ்ச கவ்யம் என்று சொல்வோம். இந்த பஞ்ச கவ்யத்தை "சிறந்த சுத்தீகரணி" அதாவது "தூய்மையாக்கி" என்று சொல்லுவார்கள். பல தீட்டுகள் தீர்வதற்கு அதாவது உணரப்படா அழுக்குகள் தீர்வதற்கு இது மிகச் சிறந்த தெளிப்பானாகவும், குடிப்பானாகவும் விளங்குகிறது.

இந்த பஞ்ச கவ்யத்தில் எதை முதலில் சேர்க்க வேண்டும், என்ற வரிசைகள் நூல்களில் சொல்லப்பெற்றுள்ளன. இது நமக்குத் தெரிந்த சேதி. இதைப் போலவே பஞ்ச தைல தீபம் என்பதும் இதில் எந்த எண்ணெயை முதலில் ஊற்ற வேண்டும் என்ற வரிசை சொல்லப்படுகிறது. இதை ஐந்து எண்ணெய் தீபம் என்று நாம் வழக்கத்தில் சொல்லிக் கொண்டிருக்கிறோம். இந்த 5 எண்ணெய், 3 எண்ணெய், 2 எண்ணெய், ஓரெண்ணெய் - இவைகளை எதை வீட்டில் ஏற்ற வேண்டும், எதை கோவிலில் ஏற்ற வேண்டும் என்பதை விளக்கமாகச் சொல்லாமல் குழப்பிய குழப்பத்தில் பாமரர்கள் இன்னும் குழம்பிக் கொண்டிருக்கிறார்கள்.

சொல்வதைத் தெளிவாகவும், முற்ற முழுதுமாகச் சொன்னால் தான், அது சரியான திசையில் பயணம் செய்து பலனைக் கொடுக்கும் என்று நாம் நம்புகிறோம், எல்லோரும் எதிர்பார்கிறார்கள். மற்ற ஆசிரியர்கள் சொன்னவைகளை திருத்தியும், குறுக்கியும் சொல்லாமல், இவர் இந்த நூலில் சொல்லியுள்ளார் என்று சொன்னால், படிப்பவர்கள் பாராட்டுவார்கள்.

எல்லாத் துறைகளையும் விட, உபாஸனா மார்க்கத்தில், உபாஸனையைச் சரியாகச் செய்யாததினால் மனக்குழப்பங்களும் சஞ்சலங்களும் விளைய ஏது உள்ளது. இந்த நிலையில் மூலோர்கள் மேலோர்களாக இருந்து வழிகாட்ட வேண்டும்.

ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் சக்தியே ஒளிவிடுகிறது; பேசுகிறது; பாடுகிறது; நடக்கிறது; சுகம் துக்கம் இரண்டையும் கூட அடைகிறது. சக்தி சரீரத்துக்குள் இல்லை என்று சொன்னால் எதையும் அனுபவிக்கும் நிலையானது ஒரு மனிதனுக்கு இருக்காது; புண்ணியம், புண்ணியத்தினால் வரும் பலன்; பாவம், பாவத்தின் விளைவு; இவைகள் எல்லாமே சக்தியின் ஆணைப்படி நடக்கின்றன. சக்தி இல்லையென்று சொன்னால் ஒரு மரம் கூட சலசலக்காது. எந்த உயிரும் ஜனிக்காது. சக்தியின் குணம் இடத்துக்கு இடம் காலத்துக்குக் காலம் விளையாட்டுக்காக வேறுபடுகிறது.

மரத்திலிருக்கும் காய் பழுத்தபிறகு சக்தி அதைக் கீழ் நோக்கித் தள்ளுகிறது. விதை முளைக்கத் துவங்கியவுடன் சக்தி மரத்தை மேலே நோக்கி எழுப்புகிறது. பாலாக இருக்கும்போது அதனுள் ஆடையைத் தருகின்ற சக்தி தயிராக மாற்றிய பிறகு அதற்குள் வெண்ணெய்யை வைக்கிறது. வெண்ணெய் தனியாக இருக்கும்போது தண்ணீரோடு கலந்து இருக்கிறது. அதை வெப்பப் படுத்திய பிறகு நெய்யாக மாறுகிறது. நெய்யும், திரியும் கலக்கும்போது அங்கே ஜோதி தெரிகிறது.

ஜோதியைக் கண்ணுக்குள் கொண்டு வந்து காட்டுவது சக்தி. தானே ஜோதியாக விளங்கித் தன்னைச் சார்ந்தவனையும் ஜோதியாக ஆக்குவதுதான் சக்தியுடைய இயல்பு. கங்கை சாக்கடையில் கலக்கும் போதும் கங்கையாகத்தான் இருக்கிறது. பால் தண்ணீரோடு கலந்தாலும் பாலாகத்தான் இருக்கிறது. இந்த மகத்தான உண்மைகள் சக்தி தரிசனத்தின் அசைக்க முடியாத சிந்தனைகள். சிந்தனைகள் அலையும்பொழுது துக்கம் வருகிறது. சிந்தனைகள் சேதாரமில்லாமல் ஒரே ஆதாரத்தில் நிற்கும் பொழுது சகஸ்ராரம் விரிகிறது. மனிதனுடைய எண்ணங்கள்,

அதன் விளைவான எழுச்சிகள் எல்லாமே சக்தியினால் விளைவதுதான். சலனமில்லாததை சிவம் என்கிறோம். நன்றாக உறங்குகிறவனை சிவனே என்று தூங்குகின்றான் என்கின்றோம். நன்றாக ஓடி ஆடுபவனை நல்ல சக்தியோடு செயல்படுகின்றான் என்கிறோம்.

சலனம், நிர்ச்சலனம் இரண்டும் இணையும்பொழுது புதுவேகம் பிறக்கிறது. துக்கத்தினிடையிலே சந்தோஷம் வந்தவுடன் துக்கம் மறைந்து போய் விடுகிறது. சக்தியும் சிவமும் இணையும்பொழுது பிரபஞ்சம் பிறக்கிறது. இதை வெளிக்காட்ட சிவத்தையும் சக்தியையும் இணைத்து அர்த்த நாரீசுவரக் கோலத்தைக் காட்டியது சக்தி. தான் தோன்றியாக விளங்கும் இரு பொருள்கள் தானே இணையும்பொழுது, தான் தோன்றியதால் செய்ய வேண்டிய செயல்களைத் தானே முன்வந்து நடத்துகிறது.

வெப்பத்தின் துக்கத்தைக் குளுமையின் சுகம் போக்கிவிடுகிறது. பகற்பொழுதெல்லாம் வயிற்றுக்கோ, நற்பணிக்கோ சேவை செய்த அலுப்பை இராப்பொழுது உறக்கம் போக்கிவிடுகிறது. சிவசக்தி இணைப்பின் பேருண்மை இந்த விஷயத்தில் நன்றாக விளங்கும்.

சூரியன்- சிவம், சூரியனுடைய பொழுதிலே செயலாற்றும் திறமையைக் கொடுப்பது சக்தி. சக்தியோ சந்திரன். சந்திரனாக விளங்கும் சக்தி இயக்க சக்தியாக இருந்தாலும் அந்த இராக் காலங்களில் சிவம் மனிதனுக்கு நல்ல உறக்கத்தைக் கொடுக்கிறது. காலையில் சூரியனுடன் சக்தி இணைந்திருக்கிறது. இரவில் சக்தியுடன் சிவம் இணைந்திருக்கிறது. இல்லையென்று சொன்னால் மனிதர்கள் எல்லாம் இரவிலே எழுச்சி மிக்கவர்களாகவும், பகலிலே தூங்குகிறவர்களாகவும்தான் இருக்கமுடியும். அர்த்தநாரீசுவரத் தத்துவம் - சிவசக்தி ஐக்கியத்தத்துவம் - சிவமும் சக்தியும் பிரிக்க முடியாது என்ற பேருண்மை இதனால் தெளிவாக விளங்குகின்றது.

பகலில் சூரியனோடு சக்தி இணையும்பொழுது சக்தியின் இயக்கம் மேலோங்கி விடுகிறது. இரவிலே சிவம் சக்தியோடு இணையும் பொழுது சிவத்தின் வல்லமை மேலோங்கிவிடுகிறது. நிலையான ஒரு பொருளோடு மற்றொரு நிலையான ஒரு பொருள் கலக்கும்பொழுது கலக்கப்பட்ட பொருள், மேலெழுந்து இருக்கும் என்னும் பேருண்மையை இதனால் உணரலாம்.

விஞ்ஞானம் எடுத்துக் காட்டும் எல்லா உண்மைகளும், மெய்ஞ்ஞானம் வெளிப்படுத்தும் நல்லுண்மைகளும், சக்தி தத்துவத்தின் ஆணிவேர்களே. எல்லாவற்றையும் எவ்வளவு சிறு பொருளானாலும் மிகமிகத் துகளாக இருந்தாலும் அதையும் உடைக்க முடியும் என்ற தத்துவ வடிவு சிவம். படைக்கப்பட்ட எல்லாப் பொருள்களையும் ஒன்றாக்கவோ, படைக்கப்பட்ட ஒரு பொருளில் இருந்து மற்றொரு பொருளை சீராக்க முடியும் என்ற பெரும் தத்துவம் சக்தி. இயலும் – இயலாது, முடியும் – முடியாது, என்பன போன்ற எதிர்க்கேள்விகள் இணைகின்ற ஒரு புள்ளி சிவசக்தி ஐக்கிய தத்துவம். வடக்கும் தெற்கும் கிழக்கும் மேற்கும் வெவ்வேறு திசைகளாக இருந்தாலும் இவைகள் எல்லாம் ஒரு மத்திய புள்ளியில் சந்திக்கும். இதே போலவே சிவத்தின் இயல்பும், சக்தியினுடைய இயல்பும் வேறுபட்டது போன்று மனித மனங்களுக்குத் தோன்றினாலும் அவைகள் உண்மைகள் அல்ல. ஒரு தேங்காயைக் கையிலே வைத்துக் கொண்டு உருட்டுகிறோம். அதன் கண் பகுதி கட்டை விரலின் அருகிலே இருக்கிறது. மேலும் உருட்டுகிறோம். அந்தக் கண் பகுதியானது சுண்டு விரலைத் தொட்டு உள்ளங்கைக்குப் போய் விடுகிறது. இந்தக் கண்பகுதி இருக்கும் இடம் முதலில் கட்டை விரல் அருகில், அடுத்து சுண்டு விரல் பக்கம், அடுத்து உள்ளங்கைப் பகுதி, மீண்டும் கட்டை விரலை அடைந்து விடுகிறது. தேங்காயின் இருப்பிடத்தை அதனுடைய சுழற்சியை வைத்து முடிவாக ஒரு இடத்தைச் சொல்ல முடியாது. இடம் மாறிக் கொண்டே இருக்கிறது. இதைப்போலவே ஒரு மனிதனுக்கு வருகின்ற சுகமும், துக்கமும் மாறிக் கொண்டே இருக்கின்றன. இருட்டுக்குள்ளே இருக்கின்ற பணப்பை மறைந்து போகிறது. அதாவது கண்ணுக்குத் தெரிவதில்லை. வெளிச்சத்தில் அதே பணம் இருக்கும்பொழுது பளிச்சென்று தெரிகிறது.

துக்கம், அதனால் ஏற்படுகின்ற வெம்மையை மனிதனால் தாங்க முடிவதில்லை. வெய்யிலில் அலைகின்றவன் நிழலைத் தேடுகிறான். மழையில் அலைகிறவன் மண்டபத்தைத் தேடுகிறான். தாகத்தில் அலைகிறவன் தண்ணீரைத் தேடுகிறான். இல்லறத்திற்கு அலைகிறவன் மனைவியைத் தேடுகிறான். ஞானத்தைத் தேடுகிறவன் குருவைத் தேடுகிறான். மோட்சத்தை விரும்புகிறவன் தெய்வத்தைத் தேடுகிறான். தெய்வம் சிவமாகவும், சக்தியாகவும் விளங்குகிறது. சிவசக்தியினுடைய எழுச்சி மிக்க பிம்பங்களில் வாராஹியும் ஒருவள்.

கருணையின் மொத்த வடிவம் வாராஹி. வாராஹியை வார்த்தாளி என்று சொல்லுகிறோம். ஏனென்றால், அவள் தன்னுடைய குழந்தைகளின் வாக்கை வலுப்படுத்துகிறாள். எதிரிகளின் வாக்கை சீர் குலைக்கிறாள். அடக்கி வைக்கிறாள். பெரும் பண்டிதனும், வாராஹி உபாஸகனும் தர்க்கமிட தொடங்கினால் வார்த்தைகளின் மைந்தன்தான் ஜெயிப்பான். இதைப்போலவே உச்சிஷ்ட்ட கணபதியும் தன் குழந்தைகளின் வாக்கை வளப்படுத்தி விவாதங்களை வெற்றியடையச் செய்கிறார்.

தற்காலத்தில் உச்சிஷ்ட்ட கணபதி உபாஸனையில் நிறைந்து ஊறியவர்கள் வாக்கு வலிமையினால் தாங்கள் எடுத்த வழக்குகளில் வெற்றியடைவதை கண்கூடாக பார்க்கலாம். வக்கீல்கள், நீதி பரிபாலகர்கள் இவர்கள் வாக்கை வலுப்படுத்துபவர் உச்சிஷ்ட்ட கணபதி. உச்சிஷ்ட்ட கணபதி உபாஸனையில் இதைப் பற்றி தெரிந்து கொள்ளலாம்.

வஞ்சமில்லாத வாழ்வு தருபவள் பஞ்சமி. இவள் பஞ்சமி திதிக்கு மட்டும் சொந்தக் காரியல்ல. பஞ்ச பானங்களுக்கும் சொந்தக்காரர்களை கொஞ்சம் அசைத்தும் பார்ப்பவள். இவள் எல்லாவற்றையும் இயக்கும் இயக்கி. சத்ருக்களை தவிடு பொடியாக்கி மயக்கும் மயக்கி.

ராஜராஜேஸ்வரியின் பெரும் குதிரைப் படைத் தலைவி இவள். இதிலிருந்து இவள் வல்லமை நமக்குப் புரியும்.

இவளுடைய உபாஸனை ஒழுங்குபட செய்ய வேண்டியது. உபாஸனை முறையில் வாமமார்க்கமே தலை சிறந்ததாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. வாராஹிக்கு உரிய - ப்ரியமான நைவேத்தியங்கள் - விருப்பமான மலர்கள் - மகிழ்வு தரும் இடங்கள் இவைகளை உபாஸகன் தன் குரு மூலம் கற்றுத் தேர்ந்ததும், மூலமான நூல்களை படித்து அறிந்தும், எந்த விதமான மாற்ற ஏற்றங்களையும் செய்யாமல் உபாஸனை செய்வதே சிறப்பு.

இவளுடைய வாகனம் எருமை. இந்தக் கோலத்தில் வரும் போது "மகிஷாரூடா" என்று அழைக்கப்படுகிறாள். இப்படியே இவள் வெள்ளைக் குதிரையில் வரும் பொழுது குதிரைக்காரி என்று போற்றப்பட்டு "அஸ்வாரூடா" என்று ஏற்றப்படுகிறாள்.

ஆடி என்ற ஆஷாட மாதம் மகமாயி (பிடாரி) அதாவது கிராம எல்லை காவல் தெய்வமான துயர் நீக்கும் துர்க்கை பிடாரி, வாராஹி, அஸ்வாரூடா, கார்த்திகேயன் போன்ற தெய்வங்களுக்கு மிகமிகச் சிறப்புடைய மாதம்.

மகமாயிக்கு ஆடி ஞாயிற்றுக்கிழமை ஏற்றமிகு நாள். பிடாரி துர்க்கைக்கு ஆடிச் செவ்வாய் சிறப்புடைய நாள். வாராஹிக்கு ஆஷாட சுக்ல பஞ்சமி தலையான நாள். அஸ்வாருடாவுக்கு சுக்ல அஷ்டமியும், பஞ்சமியும் ஏற்றம் தரும் நாள். கார்த்திகேயனுக்கு ஆடி கிருத்திகை அனைவரும் போற்றும் நாள். அந்தந்த சிறப்புடைய நாட்களில் அந்தந்த தெய்வங்கள் தரும் பலன்கள் மிகுதி. இதனால்தான் அந்த நாட்களை பூஜா நாட்களாகவும், நாம் ஏற்று கொண்டு கடைபிடித்து வருகிறோம்.

மனிதனுடைய வாழ்க்கை சுமந்து வந்த வாழ்க்கை. மனிதன் பாபத்தையோ, புண்ணியத்தையோ சுமந்து கொண்டு வந்திருப்பான். கொண்டு வந்த மூட்டைகளை வியாபாரம் செய்யும்போது ஒரு சிலர் பாபங்களை ஈட்டியும், ஒரு சிலர் புண்ணியங்களை சேர்த்தும், கொண்டு வந்த மூட்டையோடு வட்டியும் சேர, மூட்டை பெரிதாகிப் போகிறது. சுமக்க முடியாமலும் பூஜிக்க முடியாமலும் பாபமோ, புண்ணியமோ தலையை அழுத்திக் கொண்டு இருக்கிறது. நம்மால் நேசிக்கப்படுபவை எல்லாம் நேசிக்கப்பட வேண்டியவை அல்ல. நம்மால் தள்ளப்பட வேண்டியவை எல்லாம் முற்றும் தள்ளப்பட வேண்டியவையும் அல்ல. இதில் எதைத் தள்ளுவது, எதைக் கொள்ளுவது - நமக்குப் புரியாத, புலப்படாத பொருளாக இருந்து கொண்டு இருக்கிறது.

இந்தப் புரியாமையிலிருந்தும், தெரியாமையிலிருந்தும் நாம் பெற்ற அறியாமையிலிருந்தும் விலக வேண்டும் என்று சொன்னால், அதற்கு சரியான துணை வாராஹியின் கால்களே. அவள் கால்களைப் பிடித்துக் கொண்டு, கண்ணீரை அவள் பாதத்தில் கொட்டி நீங்கள் அழுங்கள். நீங்கள் இவ்வளவு நாள் அழுது கொண்டிருந்த அழுகை நின்று விடும். நீங்கள் மற்றவர்களையும் அழ வைக்க மாட்டீர்கள்.

## ஆஷாடமாதம் எது?

ஆடி மாதத்தை "ஆஷாட மாதம்" என்று சொல்லுகிறோம். ஆடி மாதம் பலவகையான விரதங்களும் பண்டிகைகளும் நிறைந்த மாதம். ஆடி மாதத்தில் பெரும் விரதங்கள் பல்வேறு நலன்களைத் தருவதாக விளங்குகின்றன. பொதுவாக ஆடி மாதம் பெண்களுக்கு சிறப்பான மாதம். பெண்களுடைய வாழ்க்கைக்கு வழிகாட்டும் மாதம் என்று கூட இதைச் சொல்லலாம். ஆடி மாதத்துப் பூஜையும் குளியலும் நிறைந்த குங்குமத்தைத் தரும்.

## ஆடிச் செவ்வாய்:

ஆடி மாதத்தில் வரும் செவ்வாய்கிழமை மங்கள சண்டிகையைப் பூஜை செய்யும் கிழமை. ஆடி மாதம் செவ்வாய்க் கிழமைகளில் கன்னியாகவும், குமாரியாகவும், துர்க்கையாகவும், பாச ஹஸ்தத்தை உடையவளாகவும் விளங்குகின்ற குமரித் தெய்வத்தை வழிபடும் காலம். நீண்ட நாட்களாக திருமணமாகாத பெண்கள் ஆடிச் செவ்வாயில் விரதம் இருப்பார்கள். நதிக்கரை நகர்களில் பழைய காலம் முதலாக ஆடிச் செவ்வாய் விரதம் வழக்கத்தில் இருந்து வருகிறது. இந்த செவ்வாய்க் கிழமைகளில் கன்னிப் பெண்கள் எண்ணெய் தேய்த்து மங்கள ஸ்நானம் செய்வார்கள். அரைத்த மஞ்சள் விழுதை ஒருவருக்கொருவர் கொடுத்துக் கொள்வார்கள். அதைக் குளிக்கும்பொழுது பூசிக்கொண்டு மீதத்தை அடுத்த செவ்வாய்க்கிழமை வரை பயன்படுத்துவார்கள். இதனால்தான்,

"ஆடிச் செவ்வாய் தேடிக் குளி"

"அரைத்த மஞ்சளைப் பூசிக் குளி"

என்ற பழமொழி காலந் தெரியாத காலத்திலிருந்து வந்து கொண்டிருக்கிறது.

ஆற்றங்கரையில் குளித்த பெண்கள் ஈரத்துணியுடன் கரையோரத்துக் கன்னியம்மன் கோவில்களில் மஞ்சள் பொங்கல் செய்து, அன்னைக்கு நிவேதித்து தங்களுக்குள் ஒருவருக்கு ஒருவர் கொடுத்துக் கொண்டு உணவுண்டு மகிழ்வார்கள். இந்த ஒரு நேர உணவைத் தவிர, மற்ற நேரங்களில் உணவு உண்ணாமல் நோன்பு இருப்பார்கள். இந்த மஞ்சள் சாதத்திற்கு துணை வெஞ்சனமாக வெல்லம், தேங்காய் கீற்று, சாம்பல் பூஷணிக்காய் தாளகக் குழம்பு இவைகளைச் சேர்த்துக் கொள்வார்கள். இந்த தாளகக் குழம்பை நெல்லை, நெல்லையை ஒட்டிய கேரளப் பகுதிகளில் மட்டும் நீண்ட நாட்களாகப் பயன்படுத்தி வருகிறார்கள். பொதுவாக தேங்காய் கீற்றும் வெல்லமுமே பெரும் பகுதியோரால் பயன்படுத்தப்படும் வெஞ்சனம் ஆகும்.

ஆற்றங்கரைகளில் குளிப்பதற்கு ஏது இல்லாதவர்களும், இயலாதவர்களும், தங்கள் இல்லங்களிலேயே குளித்துவிட்டு வீடுகளில் வழிபாடு செய்து உணவு உண்பது வழக்கம். மதியம் பன்னிரண்டு மணிக்கு மேல் செல்லாமல் பூஜை வழிபாடு இவைகளைச் செய்துவிட வேண்டும். உச்சிப் பொழுதுக்குப் பிறகு, ஆடி செவ்வாயில் உணவருந்துவது நல்லதல்ல. இந்த மங்களசண்டிகை வழிபாடு மங்களவார வழிபாடு எல்லாமே

கன்னியாக விளங்கும் ஸ்ரீ துர்க்காதேவியை நோக்கி செய்யப்படுவதுதான். இந்த விரதம் திருமணத் தடங்கலையும் குடும்பத்தில் நீண்ட நாட்களாக உள்ள கடன்களையும் தீர்த்து வைக்கும். வீட்டில் உள்ள சுமங்கலிப் பெண்கள் இந்த விரதத்தைக் கடைப்பிடித்தால் குடும்ப மேன்மை மேலோங்கும். இந்த விரத நாளில் சாக்ஷாத் பரமேஸ்வரியின் பிரசாதத்தை அருந்துபவர்கள் எச்சில் தாம்பாளங்களைப் பயன்படுத்தாமல், இலைகளைப் பயன்படுத்துவது நல்லது. இலைகளில் ஆல இலையைப் பயன்படுத்தக்கூடாது.

**பதினெட்டாம் பெருக்கு:**

ஆடி மாதம் பதினெட்டாவது நாள் ஆடிப் பெருக்கு என்று சொல்லப் பெறுகிறது. இந்த நாளில் கன்னியாகவும், புஷ்பவதியாகவும், பர்த்தாவை நோக்கிப் பயணப்பட்டு நடப்பவளாகவும், பாபநாசினியாகவும், ஜீவ ஸ்வரூபியாகவும் விளங்குகின்ற நதியைப் பூஜிப்பது வழக்கம். பெருக்கெடுத்து ஓடிவரும் நதிக்குப் பலவகையான சித்ரான்னங்களை நிவேதனம் செய்து வழிபாடு செய்வது வழக்கம். கணவனை நோக்கிச் செல்லும் நதியை இவ்வாறு பூஜிப்பதனால் தங்களுக்கும் விரைவில் சிறந்த கணவன் கிடைப்பான் என்று இந்த பூஜை செய்யப் பெறுகிறது. இதைக் கன்னிப் பெண்கள் மட்டுமே பண்டைய நாளில் செய்து வந்தார்கள். பின்னர் திருமண காலத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் காளையர்களும், கலந்து கொள்ள இந்தப் பண்டிகை விழாவாக மாறியது.

**ஆடி ஞாயிற்றுக் கிழமை:**

வெப்புநோய்களுக்கு மருந்தாகவும், விஷநோய்களைப் போக்குபவளாகவும், சந்திரனை ஒத்த குளுமையும் சூரியனை ஒத்த வெம்மையும் ஒருசேர விளங்குபவளாகவும், கர்த்தபத்தை வாகனமாக உடையவளாகவும், புண்ணியங்களோடு கலந்த பாபங்களை புடைத்து சலிப்பவளாகவும், மழையாகப் பொழிபவளாகவும், வேப்ப மரத்தில் மிகுந்த விருப்பமுடையவளாகவும் விளங்கும் தாய் ஆயி, மகமாயி, மகாமாயி.

மாரியம்மனுடைய விருப்பமான மாதம் ஆடி மாதம். "ஆடியிலே கூழ் படைத்தால் அருகே வரும் செல்வமெல்லாம்" என்று எங்கள் சித்தர் சொல்லுவார்கள். மாரியம்மன் பாபப்பட்டவர்களுக்கு புண்ணியத்தைக் கொடுக்கும் தாய். புண்ணியசாலிகளுக்குப் பொன்னையும், பொருளையும், பொங்க

வைப்பாள். ஏழைகள் வீடுகளின் கதவுகளைத் தட்டிக் கொண்டு, கருணை முகத்தோடு நுழைபவள் அவள். மற்ற தெய்வங்களுக்கெல்லாம் வகைவகையாக நிவேதனங்கள் செய்யும்பொழுது அவர்கள் எவ்வளவு சந்தோஷமடைகிறார்களோ, அதில் சற்றும் குறையாமல் கொஞ்சம் கூடுதலாகவே, புளித்த கூழைப் படைக்கும் பொழுது இவள் சந்தோஷமடைகிறாள். இது மாரியம்மனுடைய பெரும் கருணைக்கு சிறு எடுத்துக்காட்டு. பாபிகளையும், வஞ்சனையாளர்களையும் நெஞ்சழுத்த காரர்களையும் உடனேயோ, அல்லது காலம் வரட்டும் என்று பொருத்திருந்தோ சரியானபடி கண்டிக்கும் இவள் உண்மையாளர்களுக்கு வாழ்க்கை பூராவும் வழிகாட்டி. ஆடி மாதத்தில் ஏழை மாரியம்மன் கோவிலாக இருந்தாலும் சரி, செல்வச் செருக்கிலே சீர் பேசும் கோவிலாக இருந்தாலும் சரி, விழா நடக்காமலிருக்காது. மாரியம்மனை மகத்தான ஆடியில் யார் பூஜிக்கிறார்களோ, பொங்கலிட்டுக் குலவை இடுகிறார்களே, வீடுகளிலே கரகத்தை நிறுத்தி தென்னம்பாளையோடு விளங்கும் அந்த கரகங்களை அன்னையின் திருச்சன்னதிகளில் யார் செலுத்துகிறார்களோ, அவர்கள் அழுக்குடையவர்களாக இருந்தாலும், விழுப்புடையவர்களாக இருந்தாலும், அதிலிருந்து விடுபட்டு விடுகிறார்கள். இம்மாதத்தில் மாரியம்மனைத் தாலாட்டுகின்ற வீடுகளில், வீடுகளில் தாலாட்ட மக்கட் செல்வம் கிட்டும்.

**ஆஷாட நவராத்திரியின் காலம்:**

வீர மிகு பெண்தெய்வங்கள் அருள் பொழியும் மாதம் ஆஷாட மாதம். இந்த மாதத்தில் சுக்லபக்ஷ பிரதமையிலிருந்து தசமி வரை ஆஷாட நவராத்திரி பூஜை செய்யப்பெறுகிறது. ஆஷாட நவராத்திரி மூன்று விதமாக கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ஆனி மாதம் பௌர்ணமி முதல் ஆடி மாதம் பௌர்ணமி வரை பூஜிப்பது ஒரு வகை. ஆனி மாதம் பௌர்ணமியிலிருந்து ஆடிமாதம் தசமியுடன் பூஜிப்பது மறுவகை. ஆனால் சித்தர்களும், கிரகஸ்தர்களும் ஆடி மாத அமாவாசை தொடர்ச்சி தசமிவரை செய்வதையே கடைப்பிடித்து வருகிறார்கள்.

பூஜை நாட்களில் கூடுதல், குறைதல் இருந்தாலும் ஆடி மாதத்துப் பிரதமை முதல் தசமி வரை உள்ள நாட்களே எல்லோராலும் பூஜிக்கப்பெறுகின்றன. இதுவே சிறந்தது. இவ்வகையில் பூஜிக்கும்போது பலனும் அதிகம்.

பொதுவாகவே, தேவியை வழிபட சீரும் சிறப்பும் பெற்ற நாட்கள் நவராத்திரி நாட்கள். நவராத்திரிகள் ஐந்து.

சாரதா நவராத்திரி, வஸந்த நவராத்திரி, ஆஷாட நரவராத்திரி, மாக நவராத்திரி, வன்னி நவராத்திரி. இதை "பஞ்சபூத நவராத்திரிகள்" என்று சொல்லுவார்கள். சாரதா நவராத்திரி "ப்ருத்வீ நவராத்தி." "ப்ருத்வீ" என்பது பூமியைக் குறிப்பது. பூமிக்கு இலாபங்கள் வர வேண்டும் என்பதற்காக, பூமியின் புத்திரர்களுக்கு இலாபங்கள் வரவேண்டும் என்பதற்காக, இந்த நவராத்திரி விளங்குகிறது. இந்த நவராத்திரிக்கு பிறகு பூமி வளம் பெறுவதற்கான மழை பொழிகிறது.

வஸந்த நவராத்திரி □அப்பு நவராத்திரி□. □அப்பு□ என்றால் தண்ணீரைக் குறிக்கும். தண்ணீரே எல்லா நன்மைகளுக்கும் மூல காரணமாக விளங்குகிறது. இந்த நவராத்திரியில் செடிகள் மொட்டு விட்டு மலர்ந்து மணக்கும். வஸந்த கால புருஷனால் தேவியை உபாசிக்கப்பட்ட நவராத்திரி இது. சித்தர்கள் சைத்ர பௌர்ணமியிலிருந்து வஸந்த பௌர்ணமி வரை வாலையையும், மனோன்மணியையும் பூஜை செய்து சித்தி பெற்ற நவராத்திரி இது.

'ஆஷாட நவராத்திரி' 'தேயு' நவராத்திரி. 'தேயு' என்பது நெருப்பைக் குறிப்பது. நெருப்பின் இயல்பு அழித்து ஒழிப்பது, ஆக்கித் தருவது. ஆக்குவதற்கும், அளிப்பதற்கும், அழிப்பதற்கும் வல்லமை கூட்டுகின்ற நவராத்திரி இது. இது ஆஷாட மாதத்தில் வருவதால் ஆஷாட நவராத்திரி என்று போற்றுவார்கள். ஆஷாட சுத்தத்தில் துவங்கி, நவராத்திரி கொண்டாடுவது ஸ்ரீவித்யையாளர்களின் வழி வழி வழக்கம். ஆஷாட அமாவாசையில் துவங்கி, இந்த நவராத்திரியைக் கொண்டாடுவது சித்தர்கள் நெறிமுறை பழக்கம். இதனால்தான், அஸ்வாரூடாவை 'இருமுனைக் கத்தி' என்று சொல்லுகிறோம்.

'மாக நவராத்திரி' 'வாயு நவராத்திரி.' 'வாயு' என்பது 'காற்றைக்' குறிப்பது. காற்று மனிதனுடைய உயிர். காற்றின் இயல்பு சலிக்கச் செய்வது. அதாவது இயக்கி வைப்பது; ஒரு இடத்திலிருந்து மறு இடத்திற்கு நகர்த்தி வைப்பது. காற்று எல்லா உயிரினங்களுக்குள்ளும் இயக்க சக்தியாக இயங்கி வருகிறது. காற்று, வடக்கிலிருந்து வரும் போது வாடை என்றும், தெற்கிலிருந்து வரும் போது தென்றல் என்றும் இலக்கியத்தில் பேசப்படும். காற்றுக்கும் இரண்டு குணங்கள் உண்டு. அதாவது, அது இதமாக இருக்கும் போது இதமாக இருக்கும். அபரிமிதமாக இருக்கும் போது சூழலாகவும், சூறையாகவும் மாறி ஊழிக் கூத்தாடும்.

'வன்னி நவராத்திரி' - இதை 'ஆகாச நவராத்திரி' என்று சொல்லுவார்கள். விண்ணை ஆள்வதும் மண்ணை ஆள்வதும், விண்ணை அடக்குவதும் மண்ணை அடக்குவதும் இதன் இயல்பு. வன்னி நவராத்திரி கானகத்திலே, வன்னி மரத்தடியிலே பூஜிக்கப்படுவது. க்ருத்திகை மாதத்தில் அமாவாஸி தாயான அரூபத் தாயை சித்தர்கள் இங்கே வழிபட்டார்கள். அரு உருவ நவராத்திரி என்று இதைச் சொல்லுவார்கள். அருவமும் ஆகி உருவமும் ஆகி எவைகளுமாகி விளங்குவது இந்த நவராத்திரி. இந்த நவராத்திரி உபாஸனை, மூத்த பரம்பரையாளர்களால் மட்டுமே கொண்டாடப்படுகிறது. பின்னர் எளிய மக்களால் வன போஜன விழாவாக பண்டைய நாளில் வழக்கத்தில் இருந்தது.

மஹா நவராத்திரியை ஆலமரத்தடியிலும், வஸந்த நவராத்திரியை புன்னை மரத்தடியிலும், ஆஷாட நவராத்திரியை வில்வ மரத்தடியிலும், மாக நவராத்திரியை நெல்லி மரத்தடியிலும், வன்னி நவராத்திரியை வன்னி மரத்தடியிலும், கொண்டாடி பூஜிப்பது உபாஸனா ரஹஸ்யம்.

சரத் நவராத்திரி என்றும் மஹா நவராத்திரி என்றும் சாரதா நவராத்திரி என்றும் சொல்லப்படும் புரட்டாசி நவராத்திரியில் தேவி ராஜராஜேஸ்வரி, ஸ்ரீ சக்ர நகர நாயகி, பராம்பிகை பூஜிக்கப்படுகிறாள்.

பங்குனி நவராத்திரி என்றும், வஸந்த ருது நவராத்திரி என்றும், சிந்தாமணி நவராத்திரி என்றும் அழைக்கப்படும் வஸந்த நவராத்திரியில் கன்னியாகவும், குமரியாகவும், எல்லா தேவ தேவிகளின் வடிவாகவும் விளங்கும் சாக்ஷாத் துர்க்கா பரமேச்வரீ பூஜிக்கப்படுகிறாள். சரத் நவராத்திரியில் பூஜிக்கப்படும் பராம்பிகை ராஜ்ய பரிபாலன துர்க்கையே இவளைச் சண்டி என்றும் துர்க்கை என்றும் துர்க்கா - லக்ஷ்மி - சரஸ்வதி என்றும் போற்றுவது வழக்கம்.

சாரதா நவராத்திரியில் ஒன்பது நாட்களிலும் ஒன்பது தேவிகளாக பூஜிப்பது வழக்கம். மும்மூன்று நாட்களாகப் பிரித்து துர்க்கா - லக்ஷ்மி - சரஸ்வதியாக பூஜித்துப் போற்றுவது வழி வழி வழக்கம். இந்த நவராத்திரியில் வரும் விஜயதஸமியில் தான் பாண்டவர்கள் தங்களுக்கு விதிக்கப்பட்ட எல்லா கட்டளைகளையும் முடித்துக் கொண்டு, தஸமியன்று தங்கள் ஆயுதங்களைப் பூஜித்தார்கள். பூஜித்த ஆயுதங்களை அவரவர்கள் கையில் ஏந்திக் கொண்டு விஜயம் செய்யத் துவங்கியதால், 'விஜயதஸமி' என்று சொல்லுகிறோம்.

  

ஆஷாட நவராத்திரியில் தேவி வாராஹி பூஜிக்கப்படுகிறாள். அவள் நீள் கடலாய், நீல நிற நீர்மயளாய், தாள் பிடிப்பார் தாபம் அறுப்பவளாய், அடியவர்களை பெட்டகத்தில் வைத்த பொக்கிஷம் போல் காப்பவள். இவர்களை யாராலும் அடக்கவோ, அழிக்கவோ முடியாது. இவர்களுக்குத் தீங்கு நினைப்பவர்களுக்கு, இவள் ஓர் உலக்கை ஆயுதம். இவள் துக்கத்தைக் கடந்தவள், தூக்கத்தை மறந்தவள், அடியார் ஏக்கத்தை எரித்தவள். இவளை பூஜிப்பதற்கு ஒரு புண்ணியம் வேண்டும். இவளை பூஜிப்பதற்கு ஒரு பிறப்பு போதாது. இவள் குதிரையில் வருவாள், மகிஷத்தில் வருவாள், சிம்மத்தில் இருப்பாள். இவள் கரங்கள் நான்காகவும், எட்டாகவும், பதினாறாகவும் விளங்குவாள்.

இவள் கொடியவர்களுக்கு பயங்கரமானவள். அடியவர்களுக்கு அடைக்கலமானவள். அவள் பார்வையிலே பரிவு இருக்கும். அவளை வாழ்த்துவோருக்கு வளம் இருக்கும். இவள் சிங்கத்தில் இவரும்போது வாராஹியாகவும், அஸ்வத்தில் அமரும் போது அஸ்வாரூடாவாகவும் விளங்குகின்றாள். இவளை போற்றிப் புகழ்ந்து புண்ணியங்களைப் பெருக்கிக் கொள்ளும் நவராத்திரியே 'ஆஷாட நவராத்திரி'.

மாசி மாதத்திற்குரிய மாக நவராத்திரியில் 'பூஜிக்கப்படுபவள்' பச்சைப் பசும்பொன் மரகதத்தாய். இவளே ச்யாமளை; இவளே மாதங்கி; இவளையே ராஜ ச்யாமளை என்பார்கள். 'மாதங்க கன்யா' என்று காளிதாஸன் போற்றுகிறவள் இவள். 'மாதங்கி மனஸா ஸ்மராமி' என்று தீக்ஷிதர் குரல் கொடுப்பார். மாதங்கி, ராஜ ச்யாமளை நிறைவுற்ற வாக்கையும், குறைவற்ற வெற்றியையும் தருபவள். பச்சை பசும்பொன் ஆடையில் புலர்பவள். இவள் கருணைக் கடல். போற்றும் அடியார்களின் நாக்கிலும் மனதிலும் நிறைந்து, வீட்டிலும் விளக்கிலும் விளங்குபவள். இவளை பூஜிப்பவர்களுக்கு கல்விச் செல்வமும், தனச் செல்வமும் பஞ்சமில்லாமல் இருக்கும். ஸ்ரீவித்யா மார்க்கத்தில் ராஜ ச்யாமளை சிறப்பாக பூஜிக்கப்படுகிறாள்.

ச்யாமளா தண்டகம் இந்த ச்யாமளையை முற்ற முழுதுமாகப் போற்றுகிறது.

கார்த்திகை மாதம் பூஜிக்கப்படும் வன்னி நவராத்திரி வன நவராத்திரி. வனத்திலே இருக்கும் வன்னி மரத்தடியில் வனதுர்க்கை பூஜிக்கப்படுகிறாள். எழில் பொழிலாக விளங்குபவள் இவள். இவள் தனத்தை வனத்தைப் போல அள்ளித் தருவாள். இவள் அஞ்சாதவள், கெஞ்சாதவள்,

துஞ்சாதவள். இவள் எப்போதும் ஆண்மை மிடுக்கோடு விளங்குபவள்.

துடுக்கர்களை இடுக்கிலே தள்ளி மிதிப்பவள் இவள். மாயங்களெல்லாம் இவள் வாழும் மண்ணருகே வந்ததும், மண்டியிட்டுக் கிடக்கும். தீயநெறியாளர்களின் தீச்செயல்களெல்லாம், நெருப்புக் கோளங்கள் கடலிலே விழுந்தது போல், காணாமல் போய்விடும். இவள் அடக்குபவள், ஒடுக்குபவள், ஆண்மை அரசோச்சுபவள். இவள் கையில் விண்ணும் மண்ணும் அடக்கம். இவளைத் துதிப்பவர்களுக்கு பயமில்லை. பயப்படுத்துபவர்களுக்கு இவள் ஒரு பயங்கரி. இவள் தேவர்கள் முனிவர்கள் முதல், மண் வாழ்வார்கள் யாவரையும் கூட, தன் வலக்கைக்குள் அடக்கி வைத்து விடுவாள். யாராலும் அசைக்க முடியாத மலை இவள். அடியார்களின் பயத்தைப் போக்கும் மருந்து இவள். கூப்பிடும் குரலுக்கெல்லாம் ஓடோடி வருபவள். இவளைப் 'புருஷி' என்றே மந்திரம் போற்றும்.

இந்த ஐந்து நவராத்திரிகளும் பஞ்ச பூதங்களின் வடிவாக விளங்குவதால், இதை 'பஞ்ச பூத நவராத்திரி' என்று உபாஸக பரம்பரையினர் பேசுவார்கள். நம்முடைய பெரியவர்கள் மிகச் சிறப்பாக பல செய்திகளை கூறிப் போயிருக்கிறார்கள். மூன்று மூன்றாக, ஐந்து ஐந்தாக, ஒன்பது ஒன்பதாக, இப்படியெல்லாம் ஒற்றைப்படையிலே பிரிக்கப்பட்டவைகளெல்லாம் லலித பலன்களைத் தருபவைகள். 2, 4, 6, 8, 10, 12 என்று இரட்டைப் படையிலே பிரிக்கப்பட்டவைகளெல்லாம், வலிமையும் வல்லமையும் பெற்றவைகளாக இருக்கும்.

இவ்வளவு சிறப்பு பெற்ற பஞ்சபூத நவராத்திரி காலங்களில், வல்லமை கூட்டும் ஆஷாட நவராத்திரிக்கு உரிய தெய்வமாக விளங்குபவள் உலக்கையைக் கையிலேந்தியவளாகவும், பாசத்தைக் கையில் கொண்டவளாகவும் எல்லோருக்கும் வரத்தையும், அபயத்தையும் அளிப்பவளாகவும் வெள்ளைநிறத்து குதிரையின் மேல் வருபவளாகவும், கல்கியாகவும், வாராஹியாகவும் விளங்குகின்ற 'வாராஹி' என்னும் தாய்.

ஒன்பது இரவுகளைக் கொண்டது என்ற பொருளில் நவராத்திரி என்ற சொல் வழங்கப் பெறுகிறது. மனிதர்களின் மனம் சாந்தியடையவும் உபாஸனா முறைவழிபாட்டில் சித்திபெறவும் இந்த ராத்திரி பூஜைமிக்க பலன் தருவது.

பசிக்கு உணவுதான் மருந்து.

அளவற்ற உழைப்பிற்கு தூக்கம்தான் மருந்து.

காமத்திற்கு போகம் தான் மருந்து.

கவலைக்கு மகிழ்ச்சிதான் மருந்து.

பிறப்பொழிந்து வாழ ராத்திரி பூஜையே மருந்து.

ராத்திரிகளில் செய்யப்பெறும் பூஜைகள் செய்பவனின் பாவ மூட்டைகளை எரித்துச் சாம்பலாக்கி பிறவாதநிலையைத் தருகின்றன.

குருடன் கண்ணைப்பெற்றதும் உலகைப்பார்த்து மகிழ்ச்சியடைன்றான்.

கணவனைப் பெற்றதும் கன்னிகை மகிழ்ச்சியடைகிறாள்.

சுவர்க்கத்தைப் பெற்றதும் ஆத்மன் மகிழ்ச்சியடைகிறான்.

கண் ஒளி பெற்றவன் ஒரு நாள் கண்ணின் ஒளியை இழந்து விடலாம்.

மலடி மகனும் மடிந்து போகலாம்.

கணவனை இழந்து காரிகையும் நிற்கலாம்.

சுவர்க்கத்தை அடைந்தவரும் மீண்டும் பிறந்து உழலலாம்.

எனவே சுவர்க்கமும் இன்பமும் நிலையல்ல - முடிந்த முடிவல்ல.

சுவர்க்கத்தைக்கண்டு சுகப்பட்டு மீண்டும் திரும்பி வருவதிலே என்ன சுகம் இருக்கும்? நல்ல பசியால் வருந்தி அலைந்த ஏழை ஒரு விருந்தில் சென்று அறுசுவை உணவு உண்பதைப் போல. ஒரு நாள் இப்படிச் சாப்பிட்டு விட்டு மீண்டும் பசியும் பட்டினியுமாக, இறந்து வாழும் வாழ்வாகவே இருந்தால் எப்படி இருக்கும். அவன் துன்பம் தாங்க முடியாதது. எனவே அவனுக்கு என்றுமே சுகம் இருந்தால் தானே நல்லது. நிரந்தரமான இன்பம் தான் நிலையாக அவன் வேண்டுவது.

இது போல், சுவர்க்கம் போவதும் பிறப்பதும் இழிவானது. எனவே பிறவாதநிலை வேண்டும். இந்தப் பிறவாத நிலையைத் தருவதுதான் ராத்திரிபூஜை. ராத்திரி பூஜைக்கு உரிய தேவியர்களில் ஒருவள் வாராஹி.

வாராஹியைத் தண்டினீ என்றும் வீர்யவதி என்றும் கூறுவார்கள். கையிலே உலக்கையேந்தி நிற்பதால், இவளைத் தண்டினீ என்பர். இவள் தண்டிப்பதில் பாரபட்ச மில்லாதவள். இவள் தண்டம் பாபமூட்டைகளைப் பொடித்துப்பொசுக்குவது. அன்பர்களுக்கு எளியவள். உபாஸகர்களுக்கு உரியவள். இத்தகு பெருமைபெற்ற வாராஹி அன்னையை வழிபட ஏற்ற நவராத்திரியே ஆஷாட நவராத்திரி.

எமனுக்கு கோரைப்பல் போன்று மாதங்களில் தலையாய மாதம் இந்த ஆடிமாதம். நோயும் நொடியும், வியாதியும்

வெக்கையும் கைகோத்து ஆடும் கடுமையான மாதம். பலவகைப்பிணிகள் பலப்பல வடிவம் தாங்கி நடமாடும் நரகம் இந்த மாதம். எனவே இம்மாதம் பற்றிய அச்சம் பலருக்கு உண்டு.

'உஷ்ணம் உஷ்ணேன சாந்த்தயே' என்பர் வடமொழியாளர். சூடும் சூடும் கூடும்போது குளிர்மை தோன்றும் என்னும் விஞ்ஞான தத்துவமும், முள்ளை முள்ளால் எடுப்பது போல, இம்மாதத்திற்கு வாராஹி தேவியைத் தேடிக் கண்டனர்.

பன்றியின் தலையும் எழில்நங்கையின் உடலும் கொண்டு ஒளி விடுபவள் வாராஹி. திடசித்தமும், தீர்க்கமான முடிவும், தீரமும், திறனும் உடையவள் வாராஹி தேவி. 'வளத்துக்குவாலையும் வலிமைக்கு வாராஹியும்' என்று நான் அடிக்கடி கூறுவேன். வளத்தையும் நலத்தையும் வகைவகையாகப் பெற்று மகிழவேண்டுமானால் வாலையைத்தான் தேட வேண்டும். வலிமைபெற்று அச்சமற்று அகம் நிமிரவாழ அன்னை வாராஹிதான் வழி.

வாராஹிதேவிக்கு எட்டுக்கரங்கள். ஆறுகரங்களில் ஆயுதம் தாங்கிய அவள் தனது முதல் இரு கரங்களிலும் அபயமும், வரதமும் தருகிறாள். கருத்து என்ன? தன் அடியாருக்கு அவள் திருவடி அபயம் தரும். அவர் துன்பங்களை மற்ற கரங்கள் பொடித்துப் போக்கும். தீமையையும், திரு வழிக்கும் பொய்மையையும் அவள் தோண்டி எடுத்து உடைத்து புடைத்து விடுவாள். ஸ்ரீராஜ ராஜேஸ்வரியின் சேனாதிபதி அவள். வாராஹியை உபாசித்தாலே வீர்யம் மிகுந்து விடும். கோழைகளின் அச்சம் தீர இவள் மந்திரமய மஞ்சள் பலன் தருகின்றது. வாராஹியின் கையில் ஒரு கலப்பை விளங்கும். இது நமது பிறப்பின் ஆணிவேரைத் தோண்டி, மீண்டும் முளைக்காமல் முடித்து விடும். தீர்க்கமான வாராஹி உபாஸகர்கள் பெண் சந்ததியைப் பெற்று நிறைவடைவதற்கு இது தான் காரணம்.

வாராஹியை மகிழ்வுடன் அழைக்க பல தோத்திரங்கள் உள்ளன. வாராஹி மாலா மந்திரம், வாராஹி கவசம், மிருத்யு உச்சாடன வாராஹி மந்திரம் இவை சில. வாராஹி கல்பத்தில் இன்னும் பல உள்ளன.

வாராஹி பூஜையில் தித்திப்பு வள்ளிக்கிழங்கு பஜ்யம், ததிமூல கதம்பம், மற்றும் மாஷான்னம், சர்க்கரைப் பொங்கல், வடை இவைகளை நிவேதிப்பது விசேஷம். எங்கள் சித்தர் முறை பூஜையில் சாக மூலங்களில் வேகவைக்காமல் சாப்பிடக்கூடியதை அப்படியே நிவேதிப்பது வழக்கம். இது சிறப்புடையது.

வாம ஆசாரத்தில் மது மாம்ஸாதிகளை வடக்கே பயன்படுத்துவர். தென்னவர் பழக்கம் அதுவல்ல. வாராஹி வலியவள்-வாராஹியை வழிபடுபவனும் நாளடைவில் வலியவன் ஆகிவிடுவான். எனவே வலிமைமுன் வாய்ச்சவடால் விடக்கூடாது. இதனாலேயே 'வாராஹிக்காரனோடு வாயாடாதே' என்ற பழமொழி உள்ளது. ஆஷாட நவராத்திரி பூஜை ஆத்மலாபத்தையும், குடும்ப நலத்தையும், சத்ரு நாசனத்தையும் வழங்குவது.

வாராஹி வாராஹி வாராஹி என்று மூன்று முறை சொன்னால் முடிவற்ற இன்பம் கிட்டும்.

வாராஹி வழிபடுவது முற்பிறப்பில் உள்ள புண்ணியத்தால் கிடைப்பது.

வாராஹியை வேலைக்காரியாக நினைத்து வழிபடுபவர்கள் தாங்கள் பிறப்பதற்கான பாதையைச் செப்பனிட்டு வைக்கின்றார்கள்.

பிறப்புச் செடிக்கு உரமும், தண்ணீரும் ஊற்றி வைக்கின்றார்கள்.

வாராஹியை வேலை வாங்குபவர்கள் மீண்டும் மடையர்களாகப் பிறப்பார்கள். உலகத்துக்கு அழுக்கு மூட்டையாக, சுமையாக விளங்குவார்கள்.

உங்கள் மனச்சாந்திக்கும் நல்வாழ்வுக்கும் வாராஹியிடம் போங்கள். வாராஹி வாரி வாரிக் கொடுப்பாள்-மகிழ்ந்து மகிழ்ந்து வாழுங்கள்.

## ஆஷாட நவராத்திரியில் பூஜை:

வாராஹி நவராத்திரியை கால சந்தியிலும், ஸாயம் சந்தியிலும் துவங்கிச் செய்ய வேண்டும். 'ஸ்ந்த்யயோர், ஸந்த்யயா ஸர்வ ஆபத்நிவர்த்தயே' என்று அப்பைய்ய தீக்ஷிதர் சொல்லுவார். ஸந்த்யாகால தேவீ பூஜை எல்லா ஆபத்துக்களிலும் இருந்து பூஜிப்பவர்களை விடுவிப்பது. பலனில்லாத பூஜையும் பசி நீக்காத சாப்பாடும் என்ன பயனைக் கொடுக்கும்? பலன் தரக்கூடிய பூஜைகள் குறிப்பிட்ட காலங்களில் செய்வதனால்தான் வெற்றி அடைகின்றன. ஓய்வு நேரங்களிலும், மனிதன் சாய்வு நேரங்களிலும் விழுந்து அடித்துக் கொண்டு பூஜை செய்வது பலனற்ற செயலாகும். உண்ணும் போது உண்ணுவது, உறங்கும் போது உறங்குவது என்று காலத்தே செயல்களைச் செய்பவன்தான் அறிவாளி. அவனுக்குத் தோல்விகள் வருவது இல்லை, நோய்களும் வருவது இல்லை.

வாராஹி பூஜையில் கண்டிப்பாக காலங்களைப் பின்பற்ற வேண்டும். காலங்களை மீறுகிறவர்களை இவளுக்குக் கண்டிப்பாகப் பிடிக்காது. நவராத்திரி காலங்களில் மெச்சிப் புகழும் உச்சிவரை பூஜிக்கலாம். காலை, மாலை இரண்டு வேளையும் பூஜிக்கலாம். காலை பூஜையிலும், இரவு பூஜைக்கு நூறுபங்கு பலன் அதிகம்.

காலையில் ஆறுமணி முதல் ஒன்பது மணிவரை பூஜை ஹோமம் செய்வது சிறப்பு. காலைபூஜை சற்று கூடுதலாக இருந்தால் செய்யலாம். ஆனால் காலை ஆறுமணிக்கு சங்கல்பம் செய்து கொண்டு ஆரம்பித்து விடவேண்டும். காலைஉச்சிவரை இப்படிப்பட்ட பூஜையைச் செய்யலாம். வாராஹி தந்திரம் போன்ற மேலான மந்திர ரத்தினங்களில் மேலும் பல வழிகள் பூஜைகள், ஹோமங்கள் பற்றிச் சொல்லியுள்ளன. வாராஹியை பூஜிப்பவர்கள் மான் தோலில் அமரக் கூடாது. ரத்ன கம்பளி ஆஸனங்கள், கம்பளி ஆஸனங்கள், அத்திப்பலகை, இவைகள் சிறப்பானவைகள்.

உபாஸகன் அணிய வேண்டிய மாலை ருத்ராட்சம், நவகண்டி மாலை, பவள மாலை, மாணிக்க மாலை, முத்து மாலை, இவைகள் ஏற்புடையன. இவைகள் அல்லாத மாலைகள் உபாஸனைக்கும் பூஜைக்கும் அல்லாமல் ப்ரயோகங்களுக்கு பலன் தருபவையாக இருக்கும். அவற்றை குரு மூலமாக அறியவும். வாராஹி பூஜைக்கு கைதேர்ந்த குரு தேவை, பொய் சேர்ந்த குரு அல்ல.

வாராஹி பூஜையில் 2 விளக்குகள் வைத்துக் கொள்ள வேண்டும். அதில் ஒன்று தீபம், மற்றொன்று ப்ரதீபம். 5 முக தீபம் மிகச் சிறப்புற்றது. ஒரு முக தீபம் சிறப்பிலும் சிறப்பானது. தீபத்தை ஒரு முகமாகவும், ப்ரதீபத்தை 5 முகமாகவும் ஏற்றக் கூடாது. இரண்டும் ஒரு நிலை ஒத்த முகங்களாக இருக்க வேண்டும். தீபத்தில் ஊற்றப்படும் எண்ணெய்-எள் எண்ணெய், மற்றது பசு நெய்; மகிஷ நெய்யும், நிம்ப நெய்யும் ப்ரயோகங்களுக்கானவைகள்; அவைகளை நவராத்திரி தீபத்தில் பயன்படுத்தக் கூடாது. தாமரைத் திரி, வாழைத்தண்டு திரி, பஞ்சுத் திரி - இவைகள் சிறப்பான திரிகள். பஞ்சுத் திரியை விட சிறப்பானது வாழைத் தண்டுத் திரி; வாழைத்தண்டுத்திரியை விட சிறப்பானது வெண்தாமரைத் திரி; அதிலும் சிறப்பானது செந்தாமரைத் திரி, 5 முகங்களிலும் ஒரே விதமான திரியைத்தான் பயன்படுத்த வேண்டும்; ப்ரதீபத்திலும் அப்படியே.

பஞ்சமியைத் தனியாக பூஜிக்கும் பொழுது 5 முகங்களிலும், 5 வகையான திரியைப் பயன்படுத்த வேண்டும். இந்தத் திரிகளை பற்றிய செய்திகளை குருமுகமாக அறிந்து கொள்ள வேண்டும். பஞ்ச பூதத்திரி என்று சொல்லுவார்கள். சாஸ்திரங்கள் இவை போன்ற அரிய விஷயங்களை எளிதாகச் சொல்லியுள்ளது என்பதால் அதை அப்படியே கடைப்பிடிக்கக்கூடாது. பலாக்காய் உடலுக்கு நல்லது என்று வைத்திய நூல் சொல்லியுள்ளது என்பதால் அதை அப்படியே தின்றுவிட முடியாது. அதன்மீது உள்ள தோல், முள் இவைகளை நீக்கிவிட்டு வேக வைத்தோ, மற்ற முறைப்படி பாகம் செய்தோதான் உண்ண வேண்டும். இதற்கு முறையும் முன் அனுபமும் உள்ளவர் துணைவேண்டும். மருந்தாக உண்பதானால் மருத்துவர் உதவி வேண்டும்.

மந்திர நூல்களில் சில வெளிப்படையாகத் தெரிந்தாலும் கூட உள்நோக்கம் மறைந்திருக்கும். சில பிரயோகங்கள் எல்லோராலும் செய்யத் தக்கவையாயும், சில பலரால் செய்யத் தகாதனவாயும் இருக்கும்.

நூல்களில் செய்யத்தகாதனவற்றை ஏன் சொல்ல வேண்டும். இது பிழையில்லையா? முன்னவர்கள் எல்லாவற்றையும் செய்யலாம் என்றுதான் கூறியுள்ளார்கள் என்று சிலர் கூறுவார்கள். இவர்கள் குருமூலம் கல்லாதவர்கள் அல்லது குருவோடு பகைத்துப் பிரிந்தவர்கள் அல்லது குரு எதற்கு என்று எல்லாம் நாமே என்ற மனோபாவர்கள். இப்படியெல்லாம் பலர் இருந்தாலும், நான் எல்லோரையும் நேசித்து வழிப்படுத்துவது கடமை என்று வந்துவிட்டவன். எனவே, என்னால் முடிந்தவரை எடுத்துச் சொல்லி, நல்ல பயன்களை எல்லோரும் அடைய வழிகாட்டுவேன்.

சாஸ்திர நூல்களில் உள்ளவற்றை முன்னர் வழி நடந்தவர்கள் மூலம் அணுகி அதன்படி செய்வது நல்லது. உங்கள் மனம் பேசுவது எனக்குக் கேட்கிறது. இன்று பலர் எல்லாம் தெரிந்தவர் போல வேடத்தில் விளங்குகிறார்கள். அருகே போனதும், நினைத்த எண்ணங்கள் நின்று விடுகின்றன. நெஞ்சு வலிக்கிறது. என்ன செய்வது என்ற நிலை பலருக்கு இருக்கலாம். இந்த நிலையில் நீங்கள் பூஜிக்கும் தாயைச் சரணடைந்துவிடுங்கள். அவள் ஏற்ற காலத்தில் நல்ல ஒளி காட்டுவாள். அதுவரை அவசரப்படாதீர்கள்.

ஆடி மாத அமாவாசையன்று, இரவு குளித்துவிட்டு நாக்கு அடங்கிய நிலையில், தீர்த்த கலசத்துடன் பூஜை அறையில் நுழைய வேண்டும். நுழைந்து பூஜைக்கு ஏற்ற பொருள்களை

எல்லாம் சேர்த்துக் கொண்டு 'அமாவாசை தானான அருபத்தாயே' என்ற நிலையில் இருட்டாகவும் இருட்டுக்குள் ஒளிந்திருக்கும் வெளிச்சமாகவும் அவளை புருவ நெற்றியில் தியானித்து விதிக்கப்பட்ட வழிமுறைகளில் பூஜையை துவக்க வேண்டும். விக்கிரகம் இருந்தால், அபிஷேக ஆராதனைகளோடு செய்யலாம். சித்திரங்கள் எனில், உபசார நெறியில் செய்யலாம்.

பூஜை முறைப்படி நிறைத்து மந்திரங்களை ஜெபம் செய்ய வேண்டும். அதாவது, அவரவர் குரு மூலமாக அறிந்த மந்திரத்தை ஜெபம் செய்ய வேண்டும். வடமொழி மந்திரமாக இருந்தால், கண்டிப்பாக பிழையில்லாமல் செய்ய வேண்டும்.

தமிழ் மொழி சார்ந்த மந்திரமாக இருந்தால், மீண்டும் மீண்டும் ஒலித்து பழக்கப்பட்ட நெறி தவறாது ஒலித்து ஜெபிக்க வேண்டும்.

வாராஹியின் சிறந்த நைய்வேத்தியம், பதப்படுத்திய பானம், தேன், உளுந்து வடை, அப்பம், ரக்தகதலி - இந்த ஐந்தும் - "பஞ்சமஹா நைய்வேத்தியம்" என்று சொல்லுவார்கள். இந்த நிவேதனம் முடிந்தபிறகு வாராஹி மாலை என்ற தமிழ்பாடலை படிக்க வேண்டும். இப்பாடலை பாடும்போது, தேவையில்லாமல் நம்மோடு சண்டைக்கு வந்தவர்கள் சமாதானத்திற்கு வருவார்கள் என்று நினைக்காமல், தேவியின் திருவருளை மட்டும் நினைத்து படிக்க வேண்டும்.

தாய் அவளிடம் கேட்பதை அவர்களிடமே தருவாள். நீங்கள் தாயிடமிருந்து பெற்றதை தாங்களே துய்த்து அனுபவிக்கவேண்டும். இதை தேவாரத்தில் 'வேண்டுவன வேண்டுவதை ஈவான் கண்டாய்' என்று எடுத்துக்காட்டிடும்.

வாராஹி வழிபாடு வார வழிபாடு போல எல்லோரும் சேர்ந்து செய்வதல்ல. இது தனிமனிதனுக்கும் தாய்க்கும் உள்ள தொடர்பு.

ராத்திரி பூஜையை சந்தியா காலத்தில் துவங்க வேண்டும். பொதுவாக பூஜையை இரவு ஒன்பது மணியளவில் நிறைத்துக் கொள்ளலாம். பூஜைக்கு கடஸ்தாபனம் அவசியம். சிலர் தீபத்திலும் செய்வார்கள்.

### கட பூஜை:

பிரதமையன்று கடத்தை ஸ்தாபிக்க வேண்டும். தனது ஜென்ம நக்ஷத்திர தேவதைகளை தியானித்துக் கொண்டு கடஸ்தாபனத்தில் பிரவேசிக்க வேண்டும். கடத்தினை வைக்கும் இடத்தை நன்றாக பஞ்சகவ்வியத்தால் சுத்தி செய்திருக்க வேண்டும். ஐந்துமுக கோலம் போட்டு அதன் மீது தானியங்களை

  

வரிசைப்படி வைத்து, மேலே யந்திரத்தை வைத்து, அதன் மீது கடத்தை வைக்க வேண்டும்.

சிலர் யந்திரத்தை கடதீர்த்தத்தினுள் போட்டு விடுவது உண்டு. கடத்தின் வாயைவிட யந்திரம் பெரியதாக இருந்தால், கடத்தின் அடியில்தான் வைக்க வேண்டும். கடத்தில் சப்தநதி தீர்த்தங்களைக் கலந்து வைக்க வேண்டும். கிட்டாத காலத்தில் கிடைத்த நதி ஜலத்தில் கண்டிப்பாக கங்கையைச் சேர்க்க வேண்டும். பூஜையின் போது, சப்தநதிகளை 'கங்கேச யமுனே சைவ கோதாவரி, சரஸ்வதி; நர்மதே ஸிந்து காவேரி ஜலேஸ்மின் சன்னிதிம் குரு' என்ற 'தீர்த்தாகர்ஷண மந்திரத்தால்' பூஜித்து, நதிகளை தீர்த்தத்தில் ஆவாஹனம் செய்து கொள்ளலாம். கடத்திற்கு புடவையால் அல்லது பாவாடையால் அல்லது துணியால் அலங்காரம் செய்து கொள்ளலாம். தீர்த்தத்தினுள் ஏலம், இலவங்கம் போன்ற வாசனைத் திரவியங்களைக் கூட்டவேண்டும். தங்கக் காசு அல்லது சுவர்ணநகையை போட வேண்டும். வெள்ளிக்காசுகளையும் இத்துடன் சேர்க்க வேண்டும். தலையில் மாவிலையும், பூர்ண தேங்காயும் வைக்க வேண்டும். இந்த கடத்தை முறைப்படி ஆவாஹனம் செய்து ஒன்பது நாட்களிலும் பூஜை செய்ய வேண்டும்.

எல்லாவகையான உபசாரங்களையும் கட வடிவில் விளங்கும் தேவிக்கே செய்யவேண்டும்.

## தீப பூஜை:

ஆஷாட நவராத்திரி பூஜையில் கடத்தில் பூஜிப்பது போல தீபத்திலும் பூஜை செய்வதுண்டு. தீபபூஜையில் 'அகண்டதீப பூஜை' யாகச் செய்வதுதான் சிறப்பு, அகண்ட தீப பூஜையென்றால் பிரதமையன்று தீபத்தைப் பிரகாசிக்கச் செய்து, தஸமி வரை தொடர்ந்து பாதுகாப்புடன் எரியவிட வேண்டும். இது கடினம் என்பவர்கள் தக்க ஏற்பாடுகளைச் செய்துகொண்டு விடலாம்.

தீபம் மலையேறாமல் இருக்க, கண்ணாடி அல்லது மரம் இவைகளால் விளக்கைப் பாதுகாக்கும் தொப்பிகள் என்ற மறைப்பான்களைச் செய்துகொள்ளலாம், இவ்வித பாதுகாப்புகளை, 'அகண்ட நாம பஜனைகளில்' வைத்திருப்பதைக் காணலாம். இவ்வித தீபங்கள் ஏதோ காரணங்களால் மலையேறிவிட்டால், அதாவது சமனம் ஆகிவிட்டால், சாந்தி செய்து மீண்டும் ஏற்றிப் பூஜை செய்யலாம். விளக்கை எப்போதும் உபாஸகனின் கிரகிணி ஏற்றுவது நல்லது. மற்றும் சுவாசினிகளும் ஏற்றி வைக்கலாம்.

தீபம் என்று சமனம் ஆனதோ, அதற்கு முன்புள்ள தினங்களின் பூஜையை யதோக்தமாக அதாவது ஓரளவு செய்யவேண்டும். சாந்திமந்திரங்களாக ஸ்ரீ துர்க்கா சூக்தம், சாந்தி துர்க்கா மந்திரஜெபம், சாந்தி பாடங்கள் இவைகளைச் சொல்லலாம். இவைகளில் 'பரிச்சயம்' அதாவது பழக்கம் இல்லாதவர்கள், 'சர்வமங்கல மாங்கல்யே சிவே ஸர்வார்த்தசாதகே, சரண்யே த்ரயம்பிகே தேவி நாராயணி நமோஸ்துதே', 'ஸர்வதுர்நிமித்தம், துர்கிரக பீடான்ஸர்வம் சாந்திர்பவதுமே ஸதா. சாந்தி - சாந்தி - சாந்திஹி' என்று பதினெட்டு முறை சொல்லி விளக்கின் பாதத்தில் புஷ்பம், தீர்த்தம் சந்தனம் இவைகளை அர்க்யமாகச் சேர்க்க வேண்டும். வெள்ளைப் பூவை முதலில் கையில் எடுத்து அதை சந்தனத்தில் முக்கிக்கொண்டு அதன் மீது பஞ்சபாத்திர தீர்த்தத்தில் இருந்து ஒரு உத்திரிணி நீரை ஊற்றி, இதை விளக்கின் பாதத்தில் வலது கை ஐந்து விரல்களாலும் சேர்க்கவேண்டும். உத்திரிணி என்பது பஞ்சபாத்திரங்களில் தீர்த்த பாத்திரத்தில் உள்ள சிறு கரண்டியாகும். எளியவர்களுக்கும், ஏன் மற்றவர்களுக்கும் கூட இந்த சாந்தி போதுமானது.

பின்பு இந்த தீபத்தில் பூஜையைத் தொடரலாம். இந்த விதி மற்ற எல்லா தீப பூஜைக்கும் பொருந்தும். இவ்வித பூஜைகளை அன்றாடம் ஒழுங்காகச் செய்யவேண்டும். ஒரு நாள் காலையில் பூஜை, மறுநாள் இரவில் பூஜை என்றெல்லாம் மாற்றி மாற்றிச் செய்யக்கூடாது. ஒரு சிலர் சுற்று வேலைகளில் இருப்பவர்கள் ஒன்றிரண்டு நாட்கள் மட்டும் செய்துவிட்டு, அலுவல் நிமித்தம் வெளியே போய் விடுவார்கள். இவர்கள் ஏற்ற ஏதாவது நாளில் மட்டும் பூஜை செய்துவிட்டு, மற்ற நாட்களில் ஜெபங்களைச் செய்தால் போதும். ஜெபத்தை வெளியூர்களிலும் கூடச் செய்து கொள்ளலாம்.

எதிர்பாராதவிதமாக வெளியூர் போகவேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டால் அப்போது என்ன செய்வது? தீட்டுகள் இல்லாமல் இருந்தால் மற்ற நாட்களின் பூஜையை இயன்ற அளவு செய்துவிட்டுப் போகவேண்டும். தீட்டாகப் போய், அதுவும் வந்தபிறகும் செய்ய இயலாதபடியான தீட்டுக்களாக இருந்தால், மற்ற நாட்களின் பூஜையை குரு மூலம் செய்து முடிக்க வேண்டும். குருவும் அப்போது இல்லாத நிலையில் இருந்தால், சக சிஷ்யர்களால் பூஜையை நிறைத்துக் கொள்ளலாம். அவர்களும் கூட அருகில் இல்லாத நிலையில், தனது சீடர்கள் மூலம் பூஜையை முடித்துக் கொள்ளலாம். காயத்ரீயாளர்களாயின், தங்கள் குலவசிஷ்டர் மூலம் பூஜையை நிறைத்துக் கொள்ளலாம்.

  

## எந்த தேவிகளைப் பூஜிப்பது?

ஆஷாட நவராத்திரியின் நாயகி வாராஹி தேவி. இந்தத் தாயை அசுவாருடாவாகவும் இந்த நாளில் பூஜிப்பர். வாராஹி தேவியும் அவளின் பல்வேறு தோற்றங்களும் இந்த ஆஷாட நவராத்திரியில் பூஜிக்க ஏற்றன. உபாஸகர்களாக இருப்பவர்கள் தங்கள் தங்கள் உபாஸனா தெய்வத்தையும், வாராஹி தேவியையும் பூஜிக்கலாம். முதலில் தங்கள் உபாஸனா தெய்வத்திற்கே முதலிடம் தரவேண்டும். உபாஸகர்கள் தேவியான வாராஹியை யந்திரம், கடம், தீபம், இவைகளிலும், ரக்த சந்தனம், ஹரித்திரம், சிவபூமி பஸ்பம் இவைகளிலும் ஆவாஹனம் செய்து பூஜிக்கலாம். சிவபூமி பஸ்மத்தில் வாராஹி உபாஸ்கர்கள் மட்டுமே பூஜிக்கலாம், ஜெபிக்கலாம், உச்சாடனம் செய்யலாம். மற்றவர்கள் இந்த பஸ்மபூஜை செய்வதற்கு உரியவர்கள் அல்லர்.

வாராஹிதேவியைப் பல்வேறு வடிவங்களில் பூஜிக்கலாம். சிறப்பாக நான்கு கரங்களுடன் கூடிய,

1. வாராஹி தேவி மற்றும்
2. அச்வாருடா தேவி
3. தண்டினீ தேவி
4. பஞ்சமி தேவி
5. ஸ்வப்ன வாராஹி தேவி
6. வார்த்தாளி தேவி
7. மதுவாராஹி தேவி
8. மந்திரிணி வாராஹி தேவி
9. பக்த வாராஹி தேவி

என்று பக்தர்களுக்கு உதவி செய்யும் பல மூர்த்திகள் உள்ளன. சில நூல்களிலும் சில கர்ணவழியும் வந்தவைகள். வைத்தியன் நோய்க்கு மருந்து காணல் போல, மூர்த்தி நிர்ணயம் செய்ய குருவருள் வேண்டும். எல்லாத் தேவிகளுக்கும் பூஜையை ஒரே விதமாகச்செய்யலாம். ஜெபம் வேறுபட்டும்; யந்திர பூஜை மாறுபடும். பொது யந்திரமானால் யந்திர பூஜையில் மாற்றம் இருக்காது.

## பூஜா காலம் - அருட்கோலம்:

வாராஹி தேவிக்கு ஏற்ற பூஜாகாலம் இரவுதான். இரவு நேரத்திலும் பூஜிக்கும் தேவிக்கு ஏற்ற நேரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். ‘காலம் செய்வதைக் கடவுள்கூடச்

செய்யமாட்டார். ஏற்ற காலத்தில் பூஜை செய்யவேண்டும்' என்பார் எனது குரு சித்தர்பிரான் அவர்கள். சொப்பன வாராஹியை உச்சி வரை பூஜிக்க வேண்டும். பஞ்சமியை இரவு பதினொரு மணி வரை பூஜிக்க வேண்டும். வாராஹியை பொதுவாக ஒன்பது மணிவரை பூஜை செய்யலாம்.

இரவு பூஜையை எந்த மணிக்குத் துவங்கி எந்த மணி வரை செய்கிறோமோ, அதே போலத்தான் காலை நேரத்திலும் செய்யவேண்டும். நேரங்களை அவரவர் இஷ்டப் படி மாற்றிச் செய்யக்கூடாது. தினந்தோறும் முதல்நாள் துவங்கிய நேர முறையைத்தான் கடைப்பிடித்து பூஜையைச் செய்யவேண்டும்.

ஒரு சிலர் விசேஷ பூஜையென்று, ஏற்கனவே ஸ்தாபிதம் செய்த இடத்தை விட்டு, வேறு இடங்களில் பூஜையை செய்வார்கள். இடவசதிக்காக இப்படிச் செய்வார்கள்; தந்திரநெறிக்கு இது ஒத்து வராது; சாஸ்திர நெறிக்கும் ஒத்துவராது. அதிக அன்பர்கள் தரிசிக்கும் வண்ணம் பூஜை செய்ய நினைப்பவர்கள், முதலிலேயே அதற்கு ஏற்ற இடத்தைத் தேர்வு செய்துகொள்ளவேண்டும்.

சித்தை அடைய நினைக்கும் உபாஸகமணிகள் மற்றவர்கள் பார்க்கும்படியாக, சொந்த அதாவது ஆத்மார்த்த உபாஸனை பூஜையைச் செய்யக்கூடாது.

பரார்த்த பூஜை வெளிப்படையாகத்தான் செய்ய வேண்டும். அங்கே இரகசியம் கிடையாது. இருப்பினும், சில கிரியைகளில் இரகசியம் உண்டு. குருதி தர்ப்பணம், பிந்து தர்ப்பணம், மந்திர தர்ப்பணம் - இவைகளை இரகசியமாகச் செய்தால் பலன் அதிகம்; இரகசிய அர்ச்சனையை இரகசியமாகத்தான் செய்யமுடியும்; செய்யவேண்டும்.

சதுர்த்தி, சஷ்டி, அஷ்டமி, தஸமி, துவாதஸி, அமாவாஸி - இவைகளெல்லாம் கடினம் கூடிய காருண்ய நாட்கள். இதை ஒட்டியே 'ஷட்கர்மங்கள்,' 'அஷ்டகர்மங்கள்,' 'தஸ வித்யைகள்', போன்றவைகள் எல்லாம் சொல்லப்பட்டன. இவைகளைப் பற்றிய செய்திகள் அதிகம். இவைகள் தனியாகச் சிந்திக்க வேண்டியவைகள்.

நவராத்திரியில் பஞ்சமி, அஷ்டமி, நவமி இந்த நாட்கள் சிறப்பானவைகள். இதை முதலில் ஒற்றைப்படை நாளையும், நடுவில் இரட்டைப்படை நாளையும், நிறைவில் ஒற்றைப்படை நாளையும் வைத்து நவராத்திரியை ஒரு சம்புடமாக வைத்து உள்ளார்கள். எப்போதுமே ஒரு சம்புடத்துக்குள் இருப்பவைகள் மிக மிக சிறப்பானவைகள், விலை மதிப்பற்றவைகள்.

வாராஹி நவராத்திரியில் பஞ்சமியும் அஷ்டமியும் சிறப்புற்ற நாட்கள், வாராஹியிடமிருந்து கொடை பெற வேண்டியவர்கள் பஞ்சமியில் சிறப்பான பூஜை செய்வார்கள். இந்தப் பஞ்சமி பூஜை வாராஹிக்கு மிக மிக ப்ரியமானது. அஷ்டமியில் கருணைக் கடலான தண்டினீயை பூஜிப்பவர்கள் மன வலிமை, ஆளுமை, எதிர்ப்பில் வெற்றி இவைகளை பெற்று மகிழ்வார்கள். பஞ்சமியில் பூஜிப்பவர்கள் ராஜ்ய இலாபம், அரசியல் இலாபம், பதவி, வெற்றி, தன்னிலையை நிலைப்படுத்திக் கொள்ளும் நிறை புகழ் இவைகளைப் பெற்று மகிழ்வார்கள்.

பஞ்சமியில் குதிரைக் கிழத்தியாக அதாவது, குதிரையில் இவர்பவளாக வரும் அஸ்வாரூடாவைப் பூஜிக்கின்றவர்கள் அடைகின்ற புகழுக்கு அளவே இல்லை. லலிதமாக வாராஹியை வழிபடுவது அஸ்வாரூடா கோலத்தில். மாணிக்கவாளாக, மரகதவல்லியாக, துஷ்ட ஸம்ஹாரியாக விளங்கும் வாராஹி முறைப்படுத்தப்பட்ட நெறியில் குறைவற்ற செயல்களோடு பூஜிக்கப்பட வேண்டியவள். இவளை பூஜிக்கின்ற நெறிமுறைகள் பற்றி 'வாராஹி கல்பம்', 'மந்த்ர மஹோததி', 'மந்த்ர மகார்ணவம்', 'மந்த்ர கோசம்', 'வாராஹி பரிச்சயம்' போன்ற பழம் பெரும் மந்த்ர சாஸ்த்ர நூல்கள் தெளிவாகவும் திறமையாகவும், சற்று கண்டிப்பாகவும் எடுத்துப் பேசும்.

வாராஹி! வாராஹி! என்று சொல்பவர்கள் மனத்திலே பயமே இருக்காது என்று பெரியவர்கள் சொல்வார்கள். வாராஹி நவராத்திரியான ஆஷாட நவராத்திரியை எப்படி பூஜிக்க வேண்டும் என்பதைப் பற்றிய பல செய்திகள் உள்ளன. வாராஹியை பஞ்சமியில் பூஜிக்க வேண்டும் என்று சொல்லுவதன் நோக்கம், அவளே பஞ்சமியாக விளங்குவதால்தான் 'பஞ்சமி பஞ்ச பூதேசி' என்று போற்றப்படுகிறவள். ஐந்து பூதங்களும் இவள் கட்டுக்குள் அடங்கும். நல்ல புத்திசாலிகள் வாராஹிக்கு ப்ரியமானவர்களாக இருப்பார்கள்.

வாராஹி தேவி ப்ருஹத் வாராஹி, மூல வாராஹி, ஸ்வப்ன வாராஹி, உச்சிஷ்ட்ட வாராஹி, வார்த்தாளி வாராஹி, புவன வாராஹி, ஸ்தம்பன வாராஹி, பந்தன வாராஹி, பஞ்சமி வாராஹி என்று 9 வகையாக போற்றப்படுகிறாள். நூல்களில் இவர்களில் ஒரு சிலரைப் பற்றிய சேதியே கிடைக்கும். மற்றவைகள் குரு பரம்பரையால் போற்றி பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

வராஹப் பெருமான் கடலில் மூழ்கி பூமியை தன்னுடைய தெத்திப் பல்லால் தூக்கி வெளிக் கொணர்ந்தார். இவளோ அறியாமைக் கடலில் மூழ்கிக் கிடக்கும் ப்ரக்ஞானத்தை வெளிக் கொணர்பவள், இவளை 'ஞான சாலினீ என்றும், 'ஞானேச்வரீ' என்றும் 'ப்ரஞானி (பரபிரும்ம ஞானி) என்றும் மந்திர சாஸ்த்ரங்கள் போற்றும்.

பஞ்சமி வாராஹி ஐந்து கோணத்துக்குள் விளங்குபவள். இவள் மோகனத்துக்கு மூலமாக விளங்குபவள். அறியாமையை மோகிப்பவர்களை அதிலிருந்து வெளிப்படுத்தி, அறிவை மோகிக்கச் செய்பவள். ஐந்து க்ருத்யங்களான பஞ்ச க்ருத்யங்களைச் செய்யும் பரமேச்வரனுடன் இடுகாட்டில் இருப்பவள். இவள் நெற்றி திருநீறு துலங்கும் நெற்றி. இவள் கைகள் விபூதி வழங்கும் கைகள். இவளால் மோக்ஷ இலாபம் கிடைக்கும். இகத்தில் சுகத்தையும், பரத்தில் வீட்டையும் வழங்கும் தெய்வங்களில் இவளும் ஒருத்தி. இவள் பல்வேறு ஆடை அலங்காரங்களால் உபாசிக்கப்படுகிறாள்.

கறுப்பு நிற ஆடை அணிந்தவளாயும், நீல நிற ஆடை அணிந்தவளாயும், செம்மை நிற ஆடை அணிந்தவளாயும், பச்சை நிற ஆடை அணிந்தவளாயும், முத்து வெள்ளை நிற ஆடை அணிந்தவளாயும் பூஜிக்கப்படுகிறாள். ஒவ்வொரு ஆடை அணிந்த கோலமும், ஒவ்வொரு வகையான பலன்களைத் தருவன. இவள் கரங்கள் உலக்கை ஏந்தியதும், கலப்பை ஏந்தியதும், அருள் வழங்குவதும், தன் அடியை காட்டுவதாகவும் இருப்பாள். இவள் நான்கு கரங்கள் உடையவளாகவும், எட்டு கரங்களை உடையவளாகவும், விளங்குவாள். அறிவுக்குள் அறிவாகவும், ஆற்றலுக்குள் ஆற்றலாகவும் விளங்கும் தாய் இவள். இவளை பூஜிக்க பூஜிக்க இவள் மகிழ்ச்சி அடைவர்ள்.

குங்கிலியம், சாம்பிராணி, வெட்டிவேர், குறுவேர், கஸ்தூரி மஞ்சள், மட்டிப்பால், செங்காலி, கருங்காலி, வசம்பு, தேவதாரு ஆகிய தஸ மஹா தூபங்கள் நிறைந்த இடத்தில் இவள் மகிழ்ச்சியோடு விளங்குவாள். தஸ மஹா வித்தையில் இவளும் ஒருத்தி. 'தஸ மூல பானக'த்தில் இவளுக்கு விருப்பம் அதிகம். பஞ்ச ரத்ன ஆபரணங்களில் பஞ்சமிக்கு விருப்பம் அதிகம். பஞ்சமியில் வாராஹியை பஞ்சாஸத் பீடத்தில் அமரச் செய்து, தாந்த்ர நெறியில் பூஜிப்பவர்களுக்கு பஞ்சம் வராது. பஞ்சாஸத் பீடம் என்பது 'அ' முதல் 'க்ஷ' வரையிலான மாத்ருகா அக்ஷரங்களைக் குறிப்பது. இந்த அக்ஷரங்களெல்லாம் ஜீவ ஸ்வரூபமாக விளங்கும் அக்ஷரபீடம் அமைத்து பஞ்சமியில்

வாராஹியை பூஜிக்க வேண்டும். இந்த அக்ஷரங்களினால் ந்யாஸங்களைச் செய்யவேண்டும்.

## உச்சி பூஜை:

கருணைக் கடலான வாராஹி தேவிக்கு உச்சி பூஜை விசேஷமானது. உச்சி பூஜை என்பது இரவு பன்னிரெண்டு மணிக்கு செய்யப்பெறும் பூஜையாகும். வாராஹி உபாஸகர்களுக்கு இது மிகவும் சுலபப் பலனைத் தருவது. மற்ற உபாஸகர்கள் ஆஷாட நவராத்திரியில் மட்டும் உச்சி பூஜை செய்யலாம்.

ஆஷாட நவராத்திரி காலத்தில் பூராவும் எளிய உபாஸகர்கள் உச்சி பூஜை செய்ய வேண்டுவது இல்லை. சிறப்பாக பஞ்சமியன்று மட்டும் உச்சி பூஜை செய்தால் போதும். வசதிப்பட்டவர்கள் அஷ்டமியன்றும் செய்யலாம்.

வாராஹியின் குழந்தைகள் எல்லா நாட்களிலும் உச்சி பூஜை செய்வதையே அந்தத் தாய் விரும்புகிறார்கள். இந்த உபாஸகர்கள் தேய்பிறை, வளர்பிறை ஆகிய நாட்களில் வரும் எல்லா பஞ்சமியிலும் கண்டிப்பாக உச்சிபூஜை செய்ய வேண்டும். இயலாத நேரத்தில் மட்டும் வளர்பிறை, அதாவது சுக்லபக்ஷ பஞ்சமியில் கண்டிப்பாக உச்சிபூஜை செய்யவேண்டும்.

உச்சி பூஜையில் கணவனும், மனைவியும் அமர்ந்து தேவியை பூஜிப்பது சிறப்பு. உச்சிபூஜையை பிரம்மசாரியான உபாஸகர்கள் செய்ய வேண்டியதில்லை. கிரகஸ்தர்கள் அதாவது குடும்பத்தோடு வாழ்பவர்கள், பிரம்மசாரிய நெறியுடன் இருந்து, இந்த உச்சிப் பூஜையைச் செய்யவேண்டும். பிரம்மசாரிகளில் வாராஹி உபாஸகர்கள் உச்சி பூஜையைச் செய்யலாம்.

## உச்சி பூஜை செய்வது எப்படி?

உச்சி பூஜை மூன்று வகைப்படும். ஒன்று கிரகத்தில் செய்வது; இரண்டாவது சிவ பூமியில் செய்வது; மூன்றாவது குண்டலினி யோகபூஜை. முதலாவது சாஸ்திரம், தந்திரம் இரண்டும் சேர்ந்த நெறி; மற்றது தந்திரம் மட்டுமே பிரகாசிக்கும் இரகசிய - அதிரகஸ்ய நெறி. குண்டலின் நெறி யோர்கசாஸ்திர நெறியில் வந்தது. முதலாவது சுலபம். இரண்டாவதிற்கு குரு கூடவே இருந்து வழிகாட்ட வேண்டும். மூன்றாவது யோகிகளின் நெறியில் பயிற்சிக்குப் பின்புதான் செய்யவேண்டும்.

முதல் வகையான உபாஸகனின் கிரகநெறியில் வரும் உச்சிப்பூஜை மிகச் சுலபமானது. இரவு பூஜையைச் செய்து

கொண்டு உச்சிநேரம் வந்ததும், இந்த உச்சி பூஜையைச் செய்யவேண்டும்.

தானும், தன் மனைவியும் பூஜா ஸ்தானத்தில் அமர்ந்து கொண்டு, வாராஹி தேவியின் மூலமந்திரத்தால் நூற்றிஎட்டு மந்திர அர்ச்சனை செய்ய வேண்டும். இதில் அவரவர் உபாஸனா வாராஹி மந்திரத்தைத்தான் சொல்லவேண்டும். உபமந்திர சித்திக்காகச் செய்பவர்கள், அந்த வாராஹி மந்திரத்தால் அர்ச்சிக்க வேண்டும். வாராஹி உபாஸகர்கள் அல்லாதவர்கள், வாராஹி தேவியின் மந்திரத்தில் தாங்கள் தங்கள் குரு மூலம் பெற்ற உபமந்திரத்தால் மந்திர அர்ச்சனை செய்யவேண்டும். மந்திரம் பெற்றுக் கொள்ளாதவர்கள் யாவரும், 'ஓம்-ஸ்ரீம்-ஹ்ரீம்-க்லீம்-வாராஹி தேவ்யை நம', என்று அர்ச்சனை செய்யலாம். இதைப் போல கார்யசித்திக்கான நாமங்கள் பல இருக்கின்றன. உதாரணமாக,

1. ஓம்-ஸ்ரீம்-ஹ்ரீம்-க்லீம் நமோ வாராஹ்யை மம வாக்மே பிரவேசய வாக்பலிதாய.

2. ஓம்-ஸ்ரீம்-க்லீம்-ஹ்ரீம் நம: மமமாத்ரே வாராஹி தேவி மம தாரித்திரியம் த்வம்ஸய த்வம்ஸய.

3. ஓம் சத்ரு சம்ஹாரி - சங்கடஹரணி மமமாத்ரே ஹ்ரீம் - தும் -வம் சர்வாரிஷ்டம் நிவாரய சர்வசத்ரும் நாசய நாசய.

4. க்லீம் வாராஹமுகி ஹ்ரீம்-ஸித்திஸ்வரூபிணி-ஸ்ரீம் தனவசங்கரி தனம் வர்ஷய ஸ்வாஹா.

5. ஸ்ரீம்-பஞ்சமி ஸர்வசித்திமாதா மம கிரகம்மே தனஸம்ருத்திம் தேஹி தேஹி நம:

6. ஓம் ஹ்ரீம் பயங்கரி அதிபயங்கிரி ஆச்சர்ய பயங்கரி ஸர்வஜனபயங்கரி ஸர்பூத பிரேத பிசாச பயங்கரி சர்வ பயம் நிவாரய சாந்திர்பவதுமே ஸதா.

இதைப் போன்ற இன்னும் பல மந்திர நாமங்கள் வாராஹி தந்திரம், மந்திர மஹார்ணவம் போன்ற பல மந்திர சாஸ்திரங்களில் சொல்லப் பெற்றுள்ளன. உபதேசம் பெற்றுக் கொண்டு முறைப்படி பூஜிப்பதுதான் சிறப்பு. உச்சி பூஜை பற்றி இன்னும் தெரிந்து கொள்ளும் முன்னர், வாராஹியின் மந்த்ரங்கள் பற்றிய ஒரு பொதுவான விஷயத்தை புரிந்து கொள்வது அவசியம்.

வாராஹி மந்திரம் மூன்று வகையாக விளங்குகிறது. ஒன்று சுத்த உபாஸனை மந்திரங்கள். இரண்டு மோஹப்பிரதான மந்திரங்கள். மூன்று காரிய சித்தி பிரயோக மந்திரங்கள்.

வாராஹி தேவியின் மந்திரம் சித்தி பெற, உபாஸனையில் திட நம்பிக்கை தேவை. உபாஸகனின் பார்வையைப் பொருத்து மந்திரத்தின் பலம் அமைகிறது. சித்தாரி கோஷ்ட்டத்தில் வாராஹி பலன் தராது என்று கூறப்படும் பொழுது, நம்பிக்கை இல்லாதவனுக்கு வாராஹி மந்திர ஜெபம் செய்வது பலன் தராது என்று பொருள். எனவே, எந்த ஒரு மந்திரத்தையும் உபாஸனைக்கு எடுத்துக் கொள்வதாக இருந்தாலும் அந்த மந்திரம் பலம் தரும் மந்திரமா என்பதை அறிந்து கொண்டே ஏற்று செய்ய வேண்டும்.

ஆசை வயப்பட்டு மந்திரங்களை எடுத்துக் கொண்டு, நடுவழியில் நளனைப்போல தமயந்தியை (மந்திரத்தை) விட்டு விட்டு போகக் கூடாது. மந்திரங்கள் என்பவைகள் மகத் ஐஸ்வர்யங்கள், மந்திரங்களை பாதியில் விட்டுவிட்டால், அதன் பின் விளைவுகள் மிகமிக பாதகமாக இருக்கும். தவறுதலாக எடுத்துக் கொண்ட மந்திரத்தை எப்படி தன் உபாஸனையிலிருந்து விடுவது என்பதற்கு, வழிமுறைகள் மந்திர சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ளன. இவைகளைப் பற்றி பின்னால் பேசுவோம். வேண்டுமானால் குருமுகமாக அறிந்து கொள்வோம்.

ஒரு மந்திரம் அதிக வார்த்தைகளோடு கூடியவைகளாக இருப்பதால், மிகப் பெரிய மந்திரம் உயர்ந்த மந்திரம் என்பதல்ல. மிகச் சிறிய மந்திரம் என்பதால் மிகத் தாழ்ந்த மந்திரம் என்பதல்ல. பெரிய மாலா மந்திரங்களைவிட பஞ்சாக்ஷரம், ஷடாக்ஷரம், நவாக்ஷரம், அஷ்டாக்ஷரம் போன்றவைகள் மிகப் பெரிய மந்திரங்கள், வலுவான மந்திரங்கள். வாராஹி மந்திரத்தில் பல அக்ஷர மந்திரங்கள் உள்ளன. அதே சமயத்தில், நாமங்களை உள்ளடக்கிய மிகச் சிறிய மந்திரங்களும் உள்ளன.

உச்சி பூஜை நெறியில் சித்தர்களை மிஞ்சியவர்கள் யாரும் கிடையாது. எல்லாத் தெய்வங்களையும் உபாசிக்கும் நெறி-சித்த மார்க்கம். இவைகளில் சித்தர்களின் அறிவு மிகமிக பிரகாசமானது.

ஒரு தெய்வம், அந்த தெய்வத்திற்கு ஏற்ற காலம் எது என்பதை, நன்கு முற்ற முழுவதுமாக முடிவு செய்தவர்கள் சித்தர்கள். தெய்வங்களுக்கான திசைகள் எது என்பதை, ரகசியநெறியில் குரு பரம்பரையில் சொல்லிக்கொடுக்கப் பெற்று, இன்றுவரை நிலைத்து நீண்டுகொண்டே வருகிறது. தெய்வங்களைப் பிரயோகம் செய்யும் மார்க்கங்கள் பற்றி, மந்திர சாஸ்திரங்களும் ரிஷிபுங்கவர்களும் சொன்னதில் சற்றுக் கூட குறையாமல், சில

செய்திகளை வெளிப்படையாகவும், தெளிவாகவும் கூட சித்தர்கள் சொல்லியுள்ளார்கள். பிரயோக நெறிக்கு சித்தர்கள் வலிய வழிகள் பலவற்றையும் சொல்லியதோடு நில்லாமல், எளிய வழிகளையும் தொட்டுக் காட்டியுள்ளார்கள். எளிய வழிகளில் தலையாயது "ரக்ஷை" எனப்படும் மையாகும். சித்தர் பாஷையில் உச்சித்தலம் என்பது ருத்திர பூமியாகும். எளிய மொழியில் சுடுகாடு என்றும் இதைப் பேசுவார்கள்.

வலிவான தெய்வங்களை உபாசிக்கும் உபாஸகர்கள் வாராஹி தேவியைப் பூஜிக்கலாம். காம்ய பூஜைகள் செய்யலாம். காம்ய பூஜை என்றால், தங்கள் தங்கள் விருப்பம் ஈடேறச் செய்யும் மந்திர பூஜை என்பதாகும்.

நவராத்திரிகளான மஹா நவராத்திரி, வசந்த நவராத்திரி, மாக நவராத்திரி, ஆஷாட நவராத்திரி எல்லாம், ஒன்பது நாட்கள் பூஜை நெறிப் பட்டதுதான். தெய்வங்களின் குணாகுணங்களுக்கு ஏற்ப பூஜையில் நைவேத்யம், புஷ்பம், ஹோமம், அதில் பயன்படுத்தும் ஸமித்து, திரவியங்களில் சில மட்டும் மாறுபடும். சிறப்பு விதிகள் தெரியாதவர்களும் சரி, அதன்படி செய்ய முடியாதவர்களும் சரி, பொது விதிகளின்படி நவராத்திரி பூஜையைச் செய்துவிடலாம்.

## ஆஷாட நவராத்திரியை மூன்றாகப் பிரிப்பது ஏன்?

ஆஷாட நவராத்திரியை மூன்றாகப் பிரித்துப் பூஜிப்பார்கள். முதல் மூன்று நாட்களில் ஜெபம் செய்வார்கள். அடுத்து மூன்று நாட்களில் தர்ப்பணமும் ஹோமமும் செய்வார்கள். கடைசியான மூன்று நாட்களில் ஜெபத்திற்கு ஏற்ப, 'சுவாசினி' பூஜை செய்து சந்தர்பணை செய்வார்கள்.

இப்படி மூன்றாகப் பிரித்துச் செய்வது மந்திர சித்திக்கும் காரிய சித்திக்குமான முறையாகும். குறிப்பிட்ட காரியங்களை மனதில் ஏற்று, அதற்காகச் செய்யப்பெறும் நவராத்திரி பூஜையை இப்படி மூன்றாகப் பிரித்துச் செய்வார்கள். மற்றவர்கள், இப்படி மூன்றாகப் பிரித்துப் பூஜிக்க வேண்டியதில்லை.

ஆஷாட நவராத்திரியில் வாராஹி தேவியைத் தவிர, தங்கள் உபதேச தேவி பூஜையையும் செய்யலாம். ஆஷாட நவராத்திரி, தண்டினீ தேவியான வாராஹிக்கு ஏற்றது என்பதால், அதன் சிறப்பு விதிகளையும் நெறிகளையும் பற்றி, இங்கே நாம் வெகுவாகச் சொல்லி வருகிறோம்.

**சிறந்த நிவேதனங்கள்:**

மஹாதேவியான பஞ்சமிக்கு ஏற்ற நைவேத்தியங்களை இந்த நவராத்திரியில் நிவேதிக்கலாம்.

1. சர்க்கரைப் பொங்கல் (சர்க்கரான்னம்)
2. வெல்லப் பாயசம் (குடபாயசம்)
3. மிளகு ஜீரகம் கலந்த தோசை
4. தோலி எடுக்காத முழு உளுந்து வடை
5. எல்லாப் பருப்பும் கலந்த ஆமவடை.
6. எருமைப் பால் (சர்க்கரை, குங்குமப் பூ, ஏலம், லவங்கம், பச்சைக் கற்பூரம் கலந்தது)
7. எருமைத் தயிர்
8. எள் உருண்டை
9. தயிர் சாதம் (ததியோதனம்)
10. பால் சாதம் (க்ஷீரான்னம்)
11. மொச்சைச் சுண்டல்
12. சர்க்கரை வள்ளி (பச்சை, வெந்தது, சர்க்கரை இட்டது, வறுத்தது)
13. ஆள் வள்ளி
14. தேன்
15. மதுவர்க்கம் (தேன், பழம், நெய், சர்க்கரை, காய்ந்த பழங்கள் கலந்தது)
16. குடான்னம்
17. ஹரித்ரான்னம்
18. ஜம்பீர பலான்னம்
19. பானகம்
20. மஹாபானகம்
21. தில பாயஸம்
22. திலான்னம்.

இவைகள் சிறந்த நைவேத்யங்கள். கிழங்குகளைப் பச்சையாகவும் நிவேதிக்கலாம்; வறுத்தும், வேகவைத்தும் தங்கள் வசதிப்படி செய்து நிவேதிக்கலாம்.

## ஹோம திரவியம்:

நைவேத்தியத்திற்குப் பயன்படுத்தும் எல்லா நிவேதனங்களையும் ஹோமத்திலும் ஆகுதியாக்கலாம். ஹோமத்தில் கிழங்குகளைத் தேனில் தோய்த்து ஆகுதி செய்வார்கள். நெய்யில் தோய்த்தும் ஆகுதி செய்யலாம்.

அரசு, ஆல் இரண்டின் சமித்தும் சிறப்பானது. ஊமத்தைப் பூவை ஒரு சில காரியங்களுக்கு ஹோமத்தில் போடுவார்கள். குரு மூலம் கற்றுப் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். இருப்பினும் தஸஹோம திரவியங்களாக சொல்லப் பெறுபவை -

1. கருங்காலி
2. அரசு
3. ஆல்
4. ஊமத்தை
5. எருக்கு
6. தேவதாரு
7. சந்தனம்
8. குங்கிலியம்
9. பால் சாம்பிராணி
10. அமிர்தவேர்.

## திரவ்யங்களும், பலன்களும்:

கறுப்பு மொச்சையைச் சுண்டல் செய்துகொண்டு ஹோமத்தில் பயன்படுத்தலாம். இது எதிரிகளின் தொல்லைகளைக் குறைக்கும்.

வெள்ளை மொச்சையைச் சுண்டல் செய்து அதை ஹோமத்தில் பயன்படுத்தலாம். இது தனலாபம் தரும்.

தானியங்களில் பூச்சி இல்லாததை மட்டுமே பயன்படுத்த வேண்டும்.

சர்க்கரைப் பொங்கலால் ஹோமம் செய்தால் காரியத்தடங்கல்கள் தீரும்; தனச் சேமிப்பு உண்டாகும்.

தோலி எடுக்காத முழு உளுந்து வடையால் வாராஹி தேவியின் அருள் பெருகும்; மந்திர சித்தி உண்டாகும்; பிதுர்தேவதைகளால் ஏற்பட்ட கட்டுகள் விலகும்.

வெல்லப் பாயசத்தில் கறுப்பு எள்ளைக் கலந்து நெய் சேர்த்து ஹோமம் செய்ய வேண்டும். இது எதிர்பார்க்கும் காரியத்தை சித்தியாக்கி தடங்கல்களை நீக்கும்.

எல்லாப் பருப்பும் கலந்த - உளுந்து, கடலைப் பருப்பு, துவரம் பருப்பு, தட்டைப் பருப்பு, மொச்சைப் பருப்பு - இந்த ஐந்தும் கலந்து அரைத்துத் தட்டிய ஆமவடை சத்துருவை விரட்டும். இதை நெய்யில் தோய்த்து ஹோமத்தில் இடவேண்டும். எதிரியின் எதிரியுடன் சண்டைக் கலகம் விளைவதால் இவனைவிட்டு விலகிவிடுவான்.

தாமரைப் பூவையும்-எள்ளையும் தேவிக்கு ஹோமத்தில் ஆகுதியாக அளித்தால், நிறைந்த தனத்தைத் தருவாள்.

தாமரைமணியையும், ஸ்படிகத்தையும் ஹோமத்தில் பயன்படுத்தினால், நல்ல வாக்கு வன்மை உண்டாகும். விவாதங்களில் வெற்றி கிட்டும். வழக்காடத் தேவையான சந்தர்ப்ப அறிவு கிட்டும்.

சந்தனத்தால் ஹோமம் செய்தால், வாக்குவன்மையின் புகழ் எங்கும் பெருகும்.

கொம்பரக்கு ஹோமத்திற்கு ஏற்ற திரவியம். மாமிச முண்பவர்கள் புதிய மாமிசத்தை ஹோமத்தில் பயன்படுத்துவர். இதற்கான முறைகளை குரு மூலம் நன்கு கற்றுத்தேர்ந்து, அதன்பிறகுதான் செய்வது சிறப்பு.

உருண்டை மஞ்சளினால் ஹோமம் செய்தால் எதிரியின் வாய் அடங்கும். இவ்வித பிரயோகங்கள் இன்னும் பல உண்டு. எனினும் இவ்வித பிரயோகங்களைச் செய்ய புரச்சரணை விதிகளை முற்றும் கடைப்பிடித்திருக்க வேண்டும். இல்லையென்றால் பலன் கிடைக்காது. சில சமயங்களில், ஆபத்தைச் சந்திக்கும் நிலையும்கூட வரலாம்.

அன்று பூத்த மாதுளம் பூவையும் சுத்தமான எள்ளையும் தேனையும் தங்கத் தாம்பாளத்தில் வைத்து நிவேதனம் செய்வதின் மூலம், அன்பில்லாதவர்களிடமும் கூட நல்ல அன்பை அடைய முடியும்.

## ஜப மாலை

வாராஹி ஜபத்திற்கு எல்லா மாலைகளுமே சிறந்தன. ஒரு சிலர் சிவா ஸ்தானத்தில் அக்னி முகமாக ஜெபம் செய்யும் போது, வெள்ளை ஊமத்தை அல்லது நீல ஊமத்தை இவைகளைத் தலையில் செருகிக் கொண்டு, உன்மத்த முகமாய் இருந்து கொண்டு ஜெபம் செய்வார்கள். இருந்தாலும், உருத்திராட்சமே சிறப்பானது. அதுவும், செம்பிலே கட்டப்பெற்ற மாலை சிறப்பானது. உருத்திராட்சத்துடன் ரக்த சந்தன மாலை, கருங்காலி மாலை, முப்பத்து மூன்று ஆண்டுகள் கடந்த துளஸி

மரத்தில் செய்யப் பெற்ற மாலை - இவைகளும் ஏற்புடையன. இத்துடன் செந்தாமரைக் கொட்டை மாலையும், செம்பவழ மாலையும், ஒவ்வொன்றும் அதனதன் குண நலன்களுக்கு ஏற்ப பலன்களைத் தரும். பொதுவாக, வாராஹி மந்த்ர ஜபத்திற்கு மாலை வகைகளை இரு வாரியாகப் பிரிக்கலாம்.

**1. கார்ய மாலை 8:**

1. எருக்க மாலை
2. மிளகு மாலை
3. குண்டு மணி மாலை
4. செந்தாமரை மாலை
5. வெண்டாமரை மாலை
6. வெள்ளெருக்க மாலை
7. விச்வாமித்ர க்ரந்தி மாலை
8. நல்முத்து மாலை

**2. மூல மாலை 16:**

1. ருத்ராக்ஷம்
2. துளஸி வேர் மாலை
3. பவழம்
4. ஸ்படிகம்
5. சொர்ண மாலை
6. ரஜத மாலை
7. செஞ்சந்தன கட்டை மாலை
8. வெண் சந்தன கட்டை மாலை
9. சந்தனக் குழம்பு மாலை
10. அருக மாலை
11. செந்தாமரைக் கொட்டை மாலை
12. வெண்டாமரைக் கொட்டை மாலை
13. நல்முத்து மாலை
14. நவகண்டி மாலை
15. பவித்ர மாலை
16. ஏறுமுக ருத்ராக்ஷ மாலை

**பஞ்ச மஹா ஆஸனங்கள்**

1. அத்திப் பலகை
2. புலித்தோல்
3. சிம்மத் தோல்
4. தர்பாஸனம்
5. கரும் கம்பளி ஆஸனம்

ஆகிய இவ்வைந்தும் "பஞ்ச மஹா ஆஸனங்கள்" என்று சொல்லப் பெறும்.

## சிறந்த புஷ்ப மாலை

வாராஹிக்கு சிறப்புடைய மாலை செவ்வரளி மாலையே. இருப்பினும், மல்லிகை, முல்லை, இருவாட்சி, நீல சங்கு புஷ்பம், கருந்துளஸி, வில்வம், மஹா வில்வம் ஆகியவற்றால் ஆன மாலைகளும் சிறப்புடையவை தாம்.

## ஏற்ற வாசனை தளிர்கள்

"நவ தளிர்கள்" எனப் போற்றப்படும் இந்த தளிர்கள், வாராஹி தேவியை சந்தோஷப்படுத்த விரும்பும் உபாஸகனுக்கு கைவிளக்கு.

அவை,

1. மருக்கொழுந்து
2. மாசிப் பச்சை
3. கன்னி தவனம்
4. கறுப்பு துளஸி
5. த்ரிதள வில்வம்
6. விபூதிப் பச்சை
7. கதிர் பச்சை
8. செந்தாழை
9. மல்லி இலை

இந்த நவ தளிர்களை "நவரம்யங்கள்" என்று போற்றிச் சொல்வார்கள். மற்றும் சில ப்ரயோககரமானவைகளை குரு மூலம் அறியவும்.

## ஏற்ற வேர்கள்

வாராஹிக்கு உகந்தவைகளாக சொல்லப்படும் "தஸ வேர்கள்",

1. வெட்டி வேர்
2. விளாமிச்சை வேர்
3. குரு வேர்
4. அசுவகந்தி வேர்
5. அல்லி வேர்
6. மல்லி வேர்
7. முசுகுந்த வேர்
8. சிறு நன்னாரி வேர்
9. பெரு நன்னாரி வேர்
10. அமிர்தவல்லி வேர்

இன்னும் பத்து வேர்கள் பலன் தரக்கூடியனவாக இருப்பினும், இந்த தஸவேர்கள் சிறந்தவைகள்.

**ஏற்ற கந்த மூலங்கள்**

1. தாமரைக் கிழங்கு
2. அல்லிக் கிழங்கு
3. தண்ணீர் விட்டான் கிழங்கு
4. மாகாளிக் கிழங்கு
5. பனங்கிழங்கு

பஞ்சமிக்கு இசைந்த இந்த "பஞ்ச கந்த மூலங்களை" "பஹுலாபக் கிழங்குகள்" என்று சிலாகித்துப் பேசுவார்கள். எல்லாக் கிழங்குகளும் வராஹமுகிக்கு ஏற்றவைகள் தாம்.

**தண்டினீ தண்டங்கள்**

1. கருங்காலி தண்டம்
2. செங்காலி தண்டம்
3. அரசு தண்டம்
4. ஆல் தண்டம்
5. உன்மத்தை தண்டம்

இந்த ஐந்து தண்டங்களை "பஞ்ச தண்டங்கள்" என்பார்கள். ஒவ்வொரு தண்டமும் ஒவ்வொரு பலனைக் கொண்டு சேர்க்கும்.

**ஏற்ற புஷ்பங்கள்:**

கருணைக் கடலான வாராஹி என்னும் தாயை மலரிட்டு வழிபட செந்தாமரையும், வெண்தாமரையும் சிறந்தன.

இவள் தனது வலது கண்ணால் தனத்தைத் தருகிறாள். அது செந்தாமரையை ஒத்துள்ளது. இடது கண்ணால் நல்ல வாக்கு வளத்தைத் தருகிறாள். இது வெண்தாமரையை ஒத்துள்ளது.

புதிதாய் புலர்ந்த மாதுளம்பூ, நீல அல்லி மலர், செம்பருத்தி மலர், நீலசங்கு புஷ்பம் இவைகள் அர்ச்சிக்க ஏற்ற மலர்கள். கரவீரபுஷ்பமும் அர்ச்சிக்க ஏற்ற புஷ்பம் தான்.

ரக்தபுஷ்பியும் சிறந்த மலர்களில் ஒன்று. ஒற்றைச் செம்பரத்த மலரை இதழாக பிய்க்காமலும், தெத்திப் பூவை மொட்டு இல்லாமலும் அர்ச்சிக்க வேண்டும் என்றாலும், நவரத்ன புஷ்பங்கள் என சொல்ல பெறுபவை:

1. தெத்திப் பூ
2. செம்பருத்தி
3. செவ்வரளி

4. நீல சங்கு புஷ்பம்
5. நீல ஊமத்தை
6. வெள்ளை ஊமத்தை
7. மல்லி
8. பிச்சி
9. காட்டு மல்லிகை.

**ஏற்ற வஸ்த்ரங்கள்:**

காரியங்கள் தடையின்றி நடக்க செவ்வண்ண வஸ்த்ரத்தை ஹோமத்தில் சேர்க்கவேண்டும்.

தங்கக் கரை அல்லது மஞ்சள் கரையுடன் கூடிய வெள்ளாடைகள் வாக்கு வலிமையைத் தரும். இதை ஹோமத்தில் சேர்க்கவேண்டும். பச்சையும் வாராஹிக்கு ஏற்புடையதே.

தன் காரியங்களில் குறுக்கே நிற்பவர்களை ஒரு குலுக்கு குலுக்கி, சற்று அப்புறப்படுத்த, நீல வண்ண ஆடையை ஹோமத்தில் சேர்க்கவேண்டும். சிகப்பு - நீலம் - பச்சை இம்மூன்றும் வண்ணங்களின் ஒழுங்கு.

இவ்வகை ஆடைகளைத் தானமாக வழங்குவது நல்லது. இவைகளை நல்ல சுவாசினிகளுக்கும், கன்னிகைகளுக்கும் வழங்கவேண்டும். துணிகள் நூலில் இருந்து பட்டு வரை பயன்படுத்தலாம். பணவசதியை ஒட்டி எதையும் செய்ய வேண்டும். கடன் வாங்கிப் பூஜை செய்பவன், தானும் கடன்காரனாகி, தெய்வத்தையும் கடனாளியாக்கி விடுகிறான். இது பிழை.

**தஸஹோம பக்ஷணங்கள்:**

1. உன்னியப்பம் (நெய்யில் செய்தது)
2. சன்னம்
3. மண்டையப்பம்
4. கறுப்பு உளுந்து வடை
5. லாஜ உருண்டை
6. முந்திரி உருண்டை
7. சந்த்ர கண்டம்
8. தான்ய மிச்ர பூபம்
9. பாதாம் கேசரி
10. ரஸகண்டம்.

## கார்ய பூஜை:

கார்ய பூஜை என்பது, தான் எண்ணிய நல்ல காரியங்கள் நிறைவேறச் செய்யப் பெறும் பூஜையாகும். நல்ல உபாஸகர்கள் தாங்களும் நலன் பெற்று, மற்றவர்களின் நலனையும் தான் நாடுவார்கள்.

கார்ய பூஜை செய்பவர்கள், தங்களின் எண்ணங்கள் ஈடேறத் துணைசெய்யும் வாராஹி மூர்த்தத்தை பூஜை செய்யவேண்டும். முதலில் பூஜிப்பவர், வாராஹி உபாஸகராகக் கண்டிப்பாய் இருக்கவேண்டும். வாராஹி தேவியின் ஏதாவது ஓர் மந்திரத்தையாவது புரச்சரணை செய்தவராக இருக்கவேண்டும். கார்யசித்தியை விரும்புபவருக்கு ஐந்து, ஒன்பது, பத்து, ஆகிய மூன்று நக்ஷத்திரக்காரராக இருப்பது சிறப்பு. பூர்ண தீக்ஷையுடன் கூடிய குருமார்களாக இருந்தால், நக்ஷத்திரம் பார்க்கக்கூடாது.

கார்யசித்தி பூஜைகளை தந்திர நெறி முறையில் சங்கல்பம் செய்து கொண்டு பூஜையைத் துவங்க வேண்டும். பூஜைகளை யந்திரங்களில் செய்யலாம். அதேபோல தீபத்திலும் செய்யலாம். கடங்களை ஸ்தாபித்து, அதிலும் பூஜை செய்யலாம். சிறப்பாக, அரைத்த பசுமஞ்சள், செஞ்சந்தனம் இவைகளிலும் பூஜை செய்யலாம்.

ஹோமத்தை குரு மூலம் ஹோம விதானப்படி செய்ய வேண்டும். கார்யம் எதுவோ, அதற்கான சமித்து, திரவியம், நைவேத்யம், புஷ்பம் இவைகளைத்தான் பயன்படுத்த வேண்டும்.

பூஜை செய்வதானால், ஆவாஹனம் முதல் சமர்ப்பணம் வரையில் உள்ள எல்லா அங்கங்களையும் விடாமல் செய்ய வேண்டும்.

கடத்தை வைத்து பூஜிப்பதானால், கடத்தில் தீர்த்தம் சேர்க்க, புதிதாக ஆற்றின் கரையில் ஊற்றெடுத்து அதில் இருந்து தீர்த்தம் கொண்டு வரவேண்டும்.

நதிக்கரை இல்லாத இடங்களாக இருந்தால், கூபம் கிணறுகளில் இருந்து தீர்த்தம் எடுத்து வருவது சிறப்பு. கோவில் கிணறுகளில் இருந்தும், மற்றவர்கள் வீட்டுக் கிணறுகளில் இருந்தும் தண்ணீர் எடுத்து கடத்தை நிரப்பக்கூடாது. கோவிலில்தான் கிணறு உள்ளது, மற்ற இடங்களில் கிணறு இல்லையென்றால் எடுக்கலாம். கிணற்றில் தீர்த்தத்தை எடுத்துக் கோவில் சந்நிதியில் பலகைமீது வைத்து, மூலவரை நமஸ்காரம் செய்து, உண்டியலில் தண்ணீருக்காக காசு போட்டுவிட்டு எடுத்து வரவேண்டும்.

இந்த கடத்தை முறைப்படி அமைத்து, எல்லா உபசாரங்களையும் செய்து பூஜிக்கவேண்டும். யந்திர பூஜை முதல் கடபூஜை வரை எல்லா பூஜைகளிலும் தந்திர அர்ச்சனை செய்யவேண்டும். மந்திர அர்ச்சனையும் செய்யவேண்டும்.

நெறி தவறாமல் பூஜை செய்தால், கண்டிப்பாகக் காரியங்கள் நிறைவேற்றமடையும்.

**பய நிவாரண ஜபம்:**

மூல வாராஹி தியான ஸ்லோகத்தைச் சொல்லிக் கொண்டு விபூதியில் த்ரிகோணமிட்டு, பிந்து ஸ்தானத்தில் வ்யாக்ராரூடையாக அம்பாள் வருவதாக தியானித்து, 'வம் வாராஹ்யை நம: என்ற மந்திரத்தால் 108 ற்குக் குறையாமல் ஜபம் செய்து, அந்த திரு நீற்றை அணிந்து கொண்டால், பய நிவாரணம் உண்டாகும்.

'லும் ஸ்ரீம் வம் வாராஹ்யை நம:' என்ற மந்திரத்தால், சிகப்பு கயிற்றில் மந்திரத்தை பந்தனம் செய்து, முடிச்சிட்டு அணிந்து கொள்ள, பய சம்பந்தமான அனைத்து பீதிகளும் மறைந்து போகும். ரக்ஷைக்கு பூஜா விதிகள் உள்ளன. அது எல்லா ரக்ஷா விதிகளைப் போலவே தான். ஆவாஹன உபசார பூஜைகள் செய்து அணிவது சிறப்பு. ரக்ஷைக்கு உரிய நிவேதனம் குட பானகம்.

**அர்ச்சனை நெறி:**

ஸ்ரீமத் லலிதாம்பிகையின் சேனைத் தலைவியான தண்டினீ என்ற வாராஹி தேவிக்கு, மந்திர சாஸ்திரங்களில் அர்ச்சனை வழிமுறைகள் காட்டப்பெற்றுள்ளன. சிறப்பான அர்ச்சனை 'மந்திர அர்ச்சனை' தான். மூலமந்திரத்தின் நிறைவில் 'நமஹ' என்ற சொல்லைச் சேர்த்து, புஷ்பங்களால் அர்ச்சிக்க வேண்டும். முன்பே நமஹ என்ற நிறைவில் மந்திரம் இருக்குமானால், மீண்டும் இரண்டாம் தடவையாக நமஹ சேர்க்க வேண்டாம்; சேர்க்கக்கூடாது. இந்த மந்திர அர்ச்சனையை ஹரித்ரா குங்குமத்தாலும் செய்யலாம். சிறப்பான பூஜைகள் எந்த நோக்கத்திற்காகச் செய்யப்பெறுகிறதோ, அந்த கர்மாவிற்கான புஷ்பங்களைத் தான் பயன்படுத்தவேண்டும்.

எங்கள் பீடத்தில் பயன் தரும் அர்ச்சனை, பின்பகுதியில் இணைக்கப்பெற்றுள்ளன. இதனால் அர்ச்சிக்கலாம்.

ஏற்ற தோத்திரங்கள்:

வாராஹியின் திருவருள் வழங்கும் தோத்திரங்கள் பல உள்ளன.

1. மிருத்யு உச்சாடன வாராஹி ஸ்தோத்திரம்.
2. வாராஹி கல்பத்தில் உள்ளவைகள்.
3. வாராஹி மாலை (தமிழில்)
4. அச்வாருடா மாலை (ஸ்ரீ துர்க்கைச்சித்தர் அருளியது)
5. வாராஹி அஷ்டகம்.

வாராஹி மாலை:

தமிழில் 'வாராஹி மாலை' சிறந்த வாராஹி தோத்திரம். இதைப் போல சிறந்த தோத்திரம் வாராஹி தேவிக்கு எதுவுமே கிடையாது. தேவியின் அருள் நலம், வடிவம், எதிரியை சம்ஹாரம் செய்யும் பாங்கு, பில்லி, ஏவல் போன்ற வினைகளை விரட்டும் தன்மை போன்றவைகளும், ஏன் எண்வகை கருமங்களும், இந்த மாலையில் மலர்ந்து மணக்கின்றன. இதுவும் பின் இணைப்பில் இணைந்து வருகிறது. மனப்பயத்தைப் போக்கி வலுவும், தைரியமும் தரும் சிறந்த மருந்து வாராஹி மாலை.

ஏற்ற மந்திரங்கள்:

ஜெபம் செய்வதற்கு வாராஹி தேவியின் பல மந்திரங்கள் உள்ளன. இவைகளில் குருநாதர் உபதேசம் செய்ததை ஆஷாட நவராத்திரிகளிலும், நித்யப்படிகளிலும் ஜெபம் செய்யலாம்.

எட்டெழுத்து மந்திரம் முதல் பல மந்திரங்கள் பிரயோக உபயோகபரமாகச் சொல்லப் பெற்றுள்ளன.

நான் கண்ட மூவர்:

வளமான வாக்கும், சத்துருவை தண்டிப்பதிலும், பக்தர்களைக் காப்பதிலும் உறக்கமின்றி இருப்பவள் வாராஹி தேவி. வாராஹியின் பூர்ண அருள் பெற்றவர்களில் எனது குருவின் குருவானவர்கள், குருபிரான் அவர்களும் ஆவார்கள்.

இல்லற தர்ம உபாஸனா நெறியின் கலங்கரை தீபமாகவும், மஹா மந்திர சாஸ்திர நிதியாகவும், வேதத்தின் பெட்டகமாகவும், மஹா ராஜராஜேஸ்வரராகவும் விளங்கியவர்கள் ஸ்ரீமத் ஈசமஹா பட்டாரகர் என்ற ஸ்ரீ ஈச மஹா குரு தம்பதிகள் ஆவார்கள். காமேஸ்வர காமேஸ்வர அனுகிரகம் முழுதும் பெற்ற ஸ்ரீமத் ஈச குருவரர்கள் வைதீக வித்தகராக விளங்கி, கௌலாச்சார்ய சம்பன்னராக பிரகாசித்தவர்கள். சிஷ்ய வாத்ஸல்ய குணம்

  

நிறைந்த இந்த அம்பிகாநாதர் மஹாவாராஹியின் மந்திரங்களை முறைப்படி தெரிந்து, நெறிப்படி சித்தி பெற்று, வழிப்படி தன் சீடர்களுக்கு உபதேசம் செய்தவர்கள். வாராஹி மார்க்கத்தின் பூர்ண ஞானம் இவர்களுக்கு சொந்தமானது. ஈச குரு தம்பதிகள் பற்றி இவர்களின் உபதேச மாலை, ஈச தம்பதி வைபவம் ஆகியன வெளிப்படுத்தும்.

மற்றும் பூர்ணானந்த ஸ்ரீ வித்யா பீடம் சென்னை தம்புசெட்டித் தெருவில் விளங்கியது. இதன் பீடாதிபதியாக விளங்கியவர்கள் ஸ்ரீ பூர்ணானந்த நாதர் அவர்கள். இவர்களின் குரு பிரான் ஸ்ரீ ஆனந்தாநந்தநாதர் அவர்கள் சிறந்த ஸ்ரீ வித்யா தேசிகர். இவர்கள் வடமொழி தென்மொழி இரண்டிலும் நற்கல்வி ஞானம் வாய்க்கப் பெற்றவர்கள். தற்போது காஞ்சிபீடத்தின் பரமாச்சார்யாளான பெரியவர்களுடன் மிக நெருங்கியவர்கள. தேவி பதமடைந்த ஆனந்தா நந்த நாதர் வாராஹி உபாஸனையில் ஊறியவர்கள். இவர்கள் பரதேவியின் கருணையினால் பல நற்காரியங்களை நடத்தியவர்கள். இவர்களுடைய சீடர் பூர்ணானந்தநாதர் பல ஏட்டுப் பிரதிகளில் இருந்து ஸ்ரீமத் வார்த்தாளி வாராஹியின் செய்திகள் பலவற்றைச் சேகரித்து, தனது பீடத்தின் உபயோகத்தில் வைத்திருந்தார்கள். ஆஷாட நவராத்திரி பூஜையை பதினைந்து நாட்கள் செய்து வந்தவர்கள்.

**சிந்தனை:**

மஹா வாராஹி தேவியைப் பற்றி மந்திர சாஸ்திர நூல்களில் பல செய்திகள் உள்ளன. சில இடங்களிலும், சில விஷயங்களிலும் ஒரே செய்தி, ஒன்றை ஒன்று எதிர்த்து நிற்கும். சாஸ்திரங்களைப் படிப்பதில் ஒரு வகையான சிறந்த பழக்கம் உண்டு. இதைக் குருமூலம் கற்க வேண்டும். தெரிந்த விஷயம் சில சமயம் தெரியாத விஷயத்துடன் கலந்து போய் விடும். மந்திரங்கள், அதன் செயல் தன்மை, அதன் பரிமாணம் - அதன் பயணகாலம் - பயணதூரம் இவைகளைப் பற்றி எல்லாம் ஞானம் குருவருளால் தான் சித்திக்கும். புரச்சரணை நெறியில் இருந்து வழுக்கி விழுந்து விடக் கூடாது. இது தன்னைக் கீழே தள்ளுவதுடன், தன்னால் உதவிபெற வந்தவனையும் சேர்த்துத் தள்ளிவிடும்.

எல்லா தேவி மந்திரங்களையும் தானேகுருவாக இருந்து தனக்கே ஜெபம் செய்பவர்கள் நிறைய இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் இந்த பர தேவியான வாராஹியிடம் அப்படி நடந்து கொள்ளக் கூடாது. கருணை நிறைந்தவள் இவள், அத்துடன் கடுமையும் கொண்டவள். அருளைத் தரும் இவளே அழிவையும்

செய்பவள். குளிர்மையானவள் இவள். அதே சமயத்தில் இவளே கொடும் தணலாகச் சுடுபவள். எனவேதான் வாராஹி தேவியை நன்கு ஞானம் பெற்றவர்களிடம் உபதேசம் பெறவேண்டும் என்று குருமார்கள் சொல்லிக் கொண்டு வந்துள்ளார்கள். பழைய கால குருமார்கள் பணத்துக்கு ஆசைப்பட்டவர்கள் அல்லர். தங்கள் சீடர்களின் நல்ல சந்தோஷத்தைக் கேட்கவும், அதைக் கண்களால் பார்க்கவும் ஆசைப்பட்டவர்கள். அவர்கள் மஹனீயர்கள் - மஹான்கள்!

வாராஹி போன்ற வலிய தேவதைகளை உபாஸனை செய்பவர்கள், கொஞ்சம் கூட நெறி தவறக் கூடாது; மந்த்ர சாஸ்த்ரங்கள் சொன்ன வழி முறைகளிலிருந்து தவறிப் போகக் கூடாது. அப்படித் தவறி தங்கள் இஷ்டப்படி பூஜிக்கின்றவர்கள், முக்தி - சித்தி போன்றவற்றை அடைவதற்கு பதிலாக, பித்துப் பிடித்து பின்தங்கிப் போவார்கள். அதுபோல தகுந்த குரு இல்லாமல் நூல்களைக் கையில் வைத்துக் கொண்டு, மந்திரங்களை நாக்கில் வைத்துக் கொண்டு பயணம் கிளம்பக் கூடாது.

வாராஹி தன்னுடைய குழந்தைகளின் சத்ருக்களை பகைவர் களிடமிருந்து விலக்கி வைப்பாள். ஆனால், சத்ருக்களைப் பகடைக் காய்களைப் போல நகட்டுவதில் உபாஸகர்கள் முயலக் கூடாது. கேட்பவர் பேச்சை எல்லாம் கேட்டுக் கொண்டு தலைவிரி கோலமாக அலையக் கூடாது.

வாராஹி வார்த்தைக்காரி, அவள் உபாஸகனின் வாக்கை பலப்படுத்தி, அவனை வல்லவனாய் ஆக்குவாள்.

வாராஹி தண்டினீ, அவள் தனது கையினிலே தண்டத்தோடு இருப்பாள், தன் குழந்தைகளுக்கு நியாயம் தவறிய வழிகளில் இடையூறு செய்பவர்களை தண்டிப்பாள்.

வாராஹி துஷ்ட ஜனங்களின் செயல்களை அடக்கிவைப்பாள்; கர்வம் பிடித்த வாக்குகளை உடைத்து, பலனற்றுப் போகச் செய்வாள். அவள் எப்போதும் உபாஸகனின் உள்ளிலும் வெளியிலும் உறைகின்ற உத்தமமான தாய். அழைத்த போதெல்லாம் அலுக்காமல் சலிக்காமல் வருபவள்.

வாராஹி புலியின் மீது வரும்போது, எதிரிகளை பாரபட்சம் இல்லாமல் தண்டிப்பாள்.

அவள் எருமையின் மீது வரும் போது, அவர்களின் தீய மனதைச் சாக அடித்து, வலுவிழக்கச் செய்வாள்.

வாராஹி குதிரையின் மீது வரும்போது, வசீகரணம் செய்து தந்து, அரசையே உபாஸகனின் காலடியில் போட்டு வைப்பாள்.

அவளே ஸிம்ஹத்தின் மீது வரும் போது, தர்ம நியாயங்களுக்குக் கட்டுப்பட்டு, அதர்மிகளை மட்டும் அடக்குவாள்.

வாராஹியை வெறும் தெய்வம் என்று சொல்லி முடித்து விட முடியாது. அவள் பெரிய தெய்வம். அவள் பிறப்பிலி, இறப்பிலி. அவளே ப்ராரப்தம், சஞ்சிதம், ஆகாம்யம் ஆகிய முக்கர்மங்களையும், தன் ஒரு மூச்சுக் காற்றினாலேயே வீசித் தள்ளுபவள். அதனால் தான் வாராஹி உபாஸகர்களுக்கு பிறப்பில்லை என்று சொல்லுவார்கள.

வாராஹி மிகப் புகழ் பெற்றவள். தன்னைப் போலவே தன் அடியார்களையும் புகழுக்கு உரித்தாக்குபவள். பாரபட்சமில்லாமல் தண்டிப்பவள். அதனால் தான் இவளை அரசோச்சலுக்கு அதிகாரி என்று சொல்லுவார்கள். இராஜராஜேச்வரியின் படைத் தலைவியாக இருக்க இவள் ஒருத்திக்கே வல்லமையும் ஆளுமையும் உண்டு. இவள் ஆளுமையின் பெருமை, இவள் குதிரையின் மீது இவர்ந்து வரும் போது தெரியும்.

இவள் தண்டனையின் கடுமை, கையிலே உலக்கை கொண்டு தண்டினீயாக வரும்போது தெரியும். இவளே வாக்குக்கு அரசி, வலிமைக்கு அரசி, வளமைக்கு அரசி, செழுமைக்கு அரசி, செங்கோலுக்கும் அரசி. இவளிடத்தில் நீங்கள் போக வேண்டும் என்றால் மனதை வெளுக்க வைத்துக் கொள்ளுங்கள்; உடலை சிறக்க வைத்துக் கொள்ளுங்கள்; காதுகளை திறந்து வைத்துக் கொள்ளுங்கள்; கண்களை அகல விரித்து வைத்துக் கொள்ளுங்கள்-நீங்கள் அவளை அடைந்து விடலாம்; மீண்டும் திரும்பாமல் நிலைத்து விடலாம். தன்னிடம் சேர்ந்தவர்களை இவள் என்றுமே விரட்டி அடித்ததில்லை; உருட்டி விழித்துப் பார்த்ததில்லை. கனைக்கும் குதிரை மீதிருந்து அணைத்துக் கொள்வாள்.

இத்தகைய பெருமை பெற்ற வாராஹியை நினைப்பதற்கு நல்ல மனம் வேண்டும், நல்ல புத்தி வேண்டும். அவளை, தன் தாயாக ஆக்கிக் கொள்ள பூர்வ புண்ணியம் வேண்டும். அவள் ஏமாறாதவள்; வெறும் பூஜைகளாலும், புரச்சரணைகளாலும் மட்டும் அவளை ஏமாற்றிக் கட்டுப்படுத்த முடியாது. நல்ல பக்தி இல்லாதவர்களுக்கு அவள் சித்தி தர மாட்டாள். சரணாகதி அடைந்தவர்களுக்கு அவள் முற்ற முழுதுமான புகலிடம்.

'வாராஹி,' 'வாராஹி' என்று மூச்சுக்கு மூச்சு சொல்பவர்களிடம், பேச்சுக்கு பேச்சு அவளே இருப்பாள்.

அவளை நினையுங்கள்; நினைந்து கொண்டே இருங்கள். அவளைப் பணியுங்கள்; பணிந்து கொண்டே இருங்கள். அவளைப் பூஜியுங்கள்; பூஜித்துக் கொண்டே இருங்கள்.

அவளுக்கு எப்போதும் பிரியமானவர்களாக இருங்கள்; நீங்கள் தன்யர்களாக இருந்து கொண்டு, மற்றவர்களுக்கும் நல்லது செய்பவர்களாக விளங்குவீர்கள். அவள் காலைப் பிடித்துக் கொண்டு கதறுங்கள்; காப்பாற்றப்படுவீர்கள். அவள் கையைப் பிடித்துக் கொண்டு கேளுங்கள்; உங்கள் கை நிறைய அவள் அள்ளித் தருவாள். அவளை தரிசித்துக் கொண்டே இருங்கள்; அவள் உங்கள் உடலெல்லாம் அருளைப் பொழிவாள்.




மாஹேச்வரீ


ப்ராம்ஹி


சாமுண்டா


வாராஹி


கௌமாரி


ஐந்த்ரீ


வைஷ்ணவி

**ஸப்த - மாதாக்கள்**

# வாராஹி மந்த்ர நிதி



ஸிம்ஹாரூட வாராஹி

# 2. வாராஹி மந்த்ர நிதி

## 1. வார்த்தாளி தேவி

வார்த்தாளி தேவி மூன்று கண்ணுடையவள்; தனது பக்தர்களிடத்து வாத்ஸல்யம் உடையவள். தன் குழந்தைகளின் துக்கத்தைக் காண முடியாமல் உடனே ஓடி வந்து ஆறுதல் சொல்பவள். தன் குமாரர்களுக்குத் துக்கம் தருபவர்களை தாட்சண்யம் பாராமல் தண்டித்துச் சிரிப்பாள். குழந்தைகளிடம் அன்பும், எதிரிகளிடம் கடுமையும் இவள் இயல்புக் குணம்.

நூற்றிப் பதினான்கு அக்ஷரம் கொண்ட வாராஹி மந்த்ரம் இன்றைய வழக்கில் உள்ளது; இதுவும் சிறந்தது. இதற்கு உச்சாடன பலம் வேண்டும்.




வாராஹி வசீகரண யந்த்ரம்

## 1. அஷ்டாக்ஷர வாராஹி (மேரு தந்த்ரம்)

அஸ்ய ஸ்ரீ அஷ்டாக்ஷர, வாராஹி - மஹா மந்த்ரஸ்ய-

கபில ரிஷி: அனுஷ்டுப் சந்த: வார்த்தாளிகாசுரீ - வாராஹி தேவதா. ஸ்ரீ அஷ்டாக்ஷர வாராஹி - தேவதா ப்ரஸாத ஸித்யர்த்தே - ஜபே விநியோக:

**கர ந்யாஸம்/அங்க நியாஸம்:**

ஓம் லெளம் - அங்குஷ்டாப்யாம் நம:
ஓம் ஐம் - தர்ஜனீப்யாம் நம:
ஓம் ஐம் - மத்யமாப்யாம் நம:
ஓம் ஐம் - அநாமிகாப்யாம் நம:
ஓம் ஐம் - கனிஷ்டிகாப்யாம் நம:
ஓம் லெளம் - கரதல கரப்ஷ்டாப்யாம் நம:

ஓம் லெளம் - ஹ்ருதயாய நம:
ஓம் ஐம் - சிரஸே ஸ்வாஹா
ஓம் ஐம் - சிகாயை வஷட்:
ஓம் ஐம் - கவசாயஹும்
ஓம் ஐம் - நேத்ரத்ரயாய வெளஷட்
ஓம் லெளம் - அஸ்த்ராய ஃபட்

ஓம் பூர்புவஸ்ஸுவரோம் இதி திக்பந்த:

**த்யானம்:**

ததானாம் அங்குசம் பாசம் முத்கரம் சக்திமேவ ச,
வித்யுத் பாஸாம் த்ரிநேத்ராம் ச நாசயந்தீம் ததா ரிபூன்.

**மந்த்ரம்:**

**ஐம் லெளம் ட்டம் ட்டம் ட்டம் ஹும் ஸ்வாஹா**

**மந்த்ரத்தில் பேதம்:**

**ஐம் க்லெளம் ட்டம் ட்டம் ட்டம் ஹும் ஸ்வாஹா**

வார்த்தாளி மந்த்ரத்தை எட்டு இலட்சம் ஜெபம் செய்ய வேண்டும்; எண்பதாயிரம் ஹோமம் செய்ய வேண்டும். எட்டாயிரம் தர்ப்பணம் செய்யவேண்டும்.

இந்த ஹோமத்தில், கரவீர புஷ்பம், ப்ருங்கராஜ பத்ரம், வில்வ பத்ரம், அரளி, குசம், நெல்லி போன்றவை சிறந்த திரவியங்கள்.

கடுக்காய் - எள் உருண்டை - எள் பாயஸம் - கறுப்பு எள் - எள் பொடி - எள் உருண்டை - இவைகள் ஹோமத்திற்குச் சிறந்த ஆகுதி பண்டங்களும் நிவேதனப் பண்டங்களும் ஆகும்.

கார்ய ஸித்திக்காக, அதாவது தனது எண்ணங்கள் ஈடேற 10,000 ஹோமம் செய்ய வேண்டும். சிறப்பாக, வேதிகையின் நான்கு முகங்களிலும் ஹோமம் செய்ய வேண்டும். ஆச்சார்ய குரு பிரான்கள் ஏக முகமாக ஹோமம் செய்யலாம்.

கண்டிப்பாக பசு விராட்டியைத் தான் ஹோமத்தில் பயன்படுத்த வேண்டும்.

அரசு, ஆல், அத்தி, ஸமித்துக்களும் ஏற்ற ஸமித்துக்களே.

**சிறப்புச் செய்தி:**

இந்த வார்த்தாளி தேவியின் சுலப மந்த்ரமாக மந்த்ர சாஸ்திரத்தில் 'லும் - க்ரோம் - வாராஹ்யை நம:' என்ற மஹா மந்த்ரம் சொல்லப் பெற்றுள்ளது. இது எளியது போலத் தோன்றினாலும் வலியது. இதைக் குரு மூலம் தான் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும்.

**ஜெப சித்தி:**

தாமரை மணி மாலையால் இந்த மந்த்ரத்தை ஜெபம் செய்து அணிந்து கொண்டு வந்தால், தனமும் நல்லறிவும் கிட்டும்; ஸ்படிக மணிமாலையால் இதை ஹோம குண்டத்தின் அருகில் இருந்து ஜெபம் செய்து அணிந்து கொண்டால் வாக்வளம் வரும்.

மாதுளம் புஷ்பத்தால் இந்த மந்த்ரத்தை உச்சாடனம் செய்து பூஜை செய்து வந்தால், அன்பு பெருகும்; பிரிந்தவர் கூடுவார்கள்.

## 2. ஸ்வப்ன வாராஹி

ஸ்வப்ன வாராஹி தேவி அழகான குதிரை மேல் வருபவள். ச்ரேஷ்டமும் புனிதத்தன்மையும் கலந்த ஆடைகளை அணிபவள். சூல் கொண்ட மேகம் போன்று, அதாவது மழை பொழியும் தருணத்தை யொத்த மேகங்கள், ஒன்றோடு ஒன்று முட்டி மோதி மழை நீரைக் கொட்டும் தருணத்தில், மேகம் போன்று விளங்கும் வண்ணம் உடையவள். பக்தர்களைக் குளிர்விப்பவள், வாழ்விப்பவள். மூன்று கண்களும் மோழல் முகமும் கொண்ட கன்னித் தாய். தலையில் சந்திரனைச் சூடியவள். பல் இடுக்கில், அமிழ்ந்து போன உலகத்தைத் தாங்கி வருபவள். நல்ல அழகும், அருளும், வெற்றியும் தரும் இந்தத் தேவி, புண்ணியசாலிகளால் மட்டுமே உபாஸிக்கப்படுகிறாள். அஷ்டமி - சதுர்தஸி

தினங்களில் இவளை ஜெப - ஹோமங்கள் முடிந்த பிறகு பூஜித்தால், பலன்களை அள்ளித் தருவாள்.




ஸ்ரீ ஸ்வப்ன வாராஹி பூஜன யந்த்ரம்

## 2. பஞ்ச தஸாக்ஷரீ: (மந்த்ர மஹோததி)

அஸ்ய ஸ்ரீ ஸ்வப்ன வாராஹி - மந்த்ரஸ்ய-ஈச்வர ரிஷி:

ஜகதீ சந்த: ஸ்வப்ன வாராஹி தேவதா ஓம் பீஜம் ஹ்ரீம் சக்தி: ட்ட: ட்ட: கீலகம்

மமாபீஷ்ட ஸ்வப்ன கதனார்த்தே - ஜபே விநியோக:

**ரிஷியாதி ந்யாஸம்:**

ஓம் ஈச்வர ரிஷயே நம: சிரஸ்
ஜகதீச்சந்தஸே நமோ முகம்
வாராஹி தேவதாயை நமோ ஹ்ருதயம்
ஓம் பீஜாய நமோ குஹ்யம்
ஹ்ரீம் சக்தயே நமோ பாதம்
ட்ட: ட்ட: கீலகாய நமோ நாபி
விநியோகாய நம: ஸர்வாங்கம்

**கரந்யாஸம்/அங்க ந்யாஸம்:**

ஓம் ஹ்ரீம் - அங்குஷ்டாப்யாம் நம:
நமோ வாராஹி - தர்ஜனீப்யாம் நம:
கோரே - மத்யமாப்யாம் நம:
ஸ்வப்னம் - அநாமிகாப்யாம் நம:
ட்ட: ட்ட: - கனிஷ்டிகாப்யாம் நம:
ஸ்வாஹா - கரதல கரப்ஷ்டாப்யாம் நம:

ஓம் ஹ்ரீம் - ஹ்ருதயாய நம:
நமோ வாராஹி - சிரஸே ஸ்வாஹா
கோரே - சிகாயை வஷட்:
ஸ்வப்னம் - கவசாயஹூம்
ட்ட: ட்ட: - நேத்ரத்ரயாய வௌஷட்
ஸ்வாஹா - அஸ்த்ராய ஃபட்

**மந்த்ர வர்ண ந்யாஸம்:**

ஓம் ஓம் நமோ [வலது பாதம்]
ஓம் ஹ்ரீம் நமோ [இடது பாதம்]
ஓம் நம் நமோ [லிங்கம்]
ஓம் மோம் நமோ [வலது இடுப்பு]
ஓம் வாம் நமோ [இடது இடுப்பு]
ஓம் ராம் நமோ [கண்டம்]
ஓம் ஹிம் நமோ [வலது கன்னம்]
ஓம் கோம் நமோ [இடது கன்னம்]
ஓம் ரேம் நமோ [வலது கண்]
ஓம் ஸ்வம் நமோ [இடது கண்]

ஓம் ப்னம் நமோ [வலது காது]
ஓம் ட்டம் நமோ [இடது காது]
ஓம் ட்டம் நமோ [வலது மூக்கு]
ஓம் ஸ்வாம் நமோ [இடது மூக்கு]
ஓம் ஹாம் நமோ [நெற்றி]

**த்யான ஸ்லோகம்:**

ஓம் மேகச்யாமருசிம் மனோஹரகுசாம் நேத்ரத்ரயோர் பாஸிதாம்,
கோலாஸ்யாம் சசிசேகராமசலயா தம்ஷ்ட்ராதலே சோபிதாம்.
பிப்ராணாம் ஸ்வகராம்புஜைரஸிலதாம் சர்மாஸி பாஸம்,
ஸ்ரிணிம் வாராஹி மனு சிந்தயேத்வய வராரூடாம் சுபாலங்க்ருதிம்.

த்யானம் செய்த பிறகு, ஸ்தாபிக்கப்பட்ட பீடத்தில் மண்டூகாதி பரதத்வாந்த பீட தேவதைகளை ஆவாஹிக்க வேண்டும் -

'ஓம் மண்டூகாதி பரதத்வாந்த பீட தேவதாப்யோ நம: ' என்று புஷ்பம் - அக்ஷதை ஸமர்ப்பித்த பின் நவ பீட சக்திகளைப் பூஜிக்க வேண்டும். அதாவது, கிழக்கிலிருந்து ஆரம்பித்து,

ஓம் ஜயாயை நம:
ஓம் விஜயாயை நம:
ஓம் அஜிதாயை நம:
ஓம் அபராஜிதாயை நம:
ஓம் நித்யாயை நம:
ஓம் விலாஸின்யை நம:
ஓம் தோக்த்யை நம:
ஓம் அகோராயை நம:

பீட மத்தியில் ஓம் மங்களாயை நம: என்று பூஜிக்கவும்.

பின்னர், ஸ்வர்ணத்தில் செய்யப்பட்ட யந்த்ரம் (யதாஸக்தி) அல்லது மூர்த்தத்திற்கு, நெய், பால், நீராதி உபசாரங்கள் செய்து நீராட்டி சுத்த வஸ்த்ரம் கொண்டு ஒற்றவும்.

'ஓம் ஹ்ரீம் வாராஹி யோக பீடாயை நம: 'என்ற மந்த்ரத்தால் புஷ்பம், ஆத்யம், ஆஸனம் ஸமர்ப்பித்து பீட மத்தியில் ஸ்தாபித்து ஆவாஹனம் செய்ய வேண்டும். புஷ்பாதிகள் ஸமர்ப்பித்து தேவ அனுமதி பெற்று ஆவரண பூஜையைத் துவக்க வேண்டும். மூலமந்த்ரம் சொல்லி,

'ஓம் ஸம்வின்மயே பரே தேவி பரமாம்ருதரஸப்ரியே அனுக்ஞயாம் தேஹி வாராஹி பரிவாரார்ச்சனாய மே' என்று சொல்லி புஷ்பம் இடவும். இனி ஆவரண பூஜையைத் துவங்கலாம்.

ஷட்கோணத்தில் நான்கு திக்குகள் மத்தியில் ஆரம்பித்து பூஜிக்கவும்.

ஓம் ஹ்ரீம் ஹ்ருதயாய நம:
ஹ்ருதய ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம: (1)

இப்படி எல்லா இடங்களிலும் பூஜிக்கவும்.
நமோ வாராஹி சிரஸே ஸ்வாஹா.
சிர: ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம: (2)

கோரே சிகாயை வஷட். சிகா ஸ்ரீபாதுகாம் பூஜயாமி
தர்ப்பயாமி நம: (3)

ஸ்வப்னம் கவசாய ஹும். கவச ஸ்ரீபாதுகாம் பூஜயாமி
தர்ப்பயாமி நம: (4)

ட்ட: ட்ட: நேத்ரத்ரயாய வெளஷட்.
நேத்ரத்ரய ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம: (5)

ஸ்வாஹா அஸ்த்ராய பட். அஸ்த்ர ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி
தர்ப்பயாமி நம: (6)

இவ்வாறு 6 அங்கங்களைப் பூஜிக்கவும். பின்னர் புஷ்பம் ஸமர்ப்பித்து மூல மந்த்ரம் சொல்லி,

ஓம் அபீஷ்ட ஸித்திம் மே தேஹி சரணாகதவத்ஸலே; பக்த்யா
ஸமர்ப்பயே துப்யம் ப்ரதமாவரணார்ச்சனம் (7)

இவ்விதம் படித்து புஷ்ப - தர்ப்பணாதிகள் ஸமர்ப்பிக்க வேண்டும்.

**இது தான் ப்ரதமாவரண பூஜை.**

இனி பதினாறு தளத்தில் கிழக்கு துவங்கி வாமாவர்த்தமாக கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென் மேற்கு, மேற்கு, வட மேற்கு, வடக்கு, வட கிழக்கு என்ற கிரமப்படி,

1. ஓம் உச்சாடின்யை நம: 8 உச்சாடினீ - ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

2. ஓம் உச்சாடினீச்வர்யை நம: 9 உச்சாடினீச்வரீ - ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

3. ஓம் சோஷிண்யை நம: 10 சோஷிணீ - ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

4. ஓம் சோஷிணீச்வர்யை நம: 11 சோஷிணீச்வரீ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

5. ஓம் மாரிண்யை நம: 12 மாரிணீ - ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

6. ஓம் மாரிணீச்வர்யை நம: 13 மாரிணீச்வரீ - ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

7. ஓம் பீஷண்யை நம: 14 பீஷணீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

8. ஓம் பீஷணீச்வர்யை நம: 15 பீஷணீச்வரீ - ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

9. ஓம் த்ராஸின்யை நம: 16 த்ராஸினீ - ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

10. ஓம் த்ராஸினீச்வர்யை நம: 17 த்ராஸினீச்வரீ - ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

11. ஓம் கம்பின்யை நம: 18 கம்பின்யை - ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

12. ஓம் கம்பினீச்வர்யை நம: 19 கம்பினீச்வரீ - ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

13. ஓம் ஆக்ஞயா விவர்த்தின்யை நம: 20 ஆக்ஞயா விவர்த்தினீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

14. ஓம் ஆச்ஞயா விவர்த்தினீவர்யை நம: 21 ஆச்ஞயா விவர்த்தினீச்வரீ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

15. ஓம் வஸ்து ஜாதேச்வர்யை நம: 22 வஸ்து ஜாதேச்வரீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

16. ஓம் ஸர்வ ஸம்பாதின்யை நம: 23 ஸர்வ ஸம்பாதினீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

இவ்வாறு 16 சக்திகளைப் பூஜித்து, புஷ்பங்களை ஸமர்பிக்க வேண்டும். இத்துடன் இரண்டாவது ஆவரண பூஜை நிறைவு பெற்றது.

இனி, அஷ்ட தளத்தில், முன்னர் சொன்னபடி வாமாவர்த்தமாக,

(1) ஓம் ப்ராம்ஹை நம: 24 ப்ராம்ஹீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(2) ஓம் மாஹேச்வர்யை நம: 25 மாஹேச்வரீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(3) ஓம் கௌமார்யை நம: 26 கௌமாரீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(4) ஓம் வைஷ்ணவ்யை நம: 27 வைஷ்ணவீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(5) ஓம் வாராஹ்யை நம: 28 வாராஹி ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(6) ஓம் இந்த்ராண்யை நம: 29 இந்த்ராணீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(7) ஓம் சாமுண்டாயை நம: 30 சாமுண்டா ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(8) ஓம் மஹாலக்ஷ்ம்யை நம: 31 மஹாலக்ஷ்மீ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

இவ்வாறு 8 தேவதைகளை எட்டு தளங்களில் பூஜை செய்து, மூன்றாவது ஆவரண பூஜையை புஷ்பம் ஸமர்ப்பித்து நிறைவு செய்யவேண்டும்.

இனி அஷ்டதளத்திற்கு வெளியில் கிழக்குத் துவங்கி, வலமிருந்து இடமாக,

(1) ஓம் அஸிதாங்கபைரவாய நம: 32 அஸிதாங்கபைரவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(2) ஓம் ருருபைரவாய நம: 33 ருரு பைரவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(3) ஓம் சண்டபைரவாய நம: 34 சண்டபைரவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(4) ஓம் க்ரோத பைரவாய நம: 35 க்ரோத பைரவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(5) ஓம் உன்மத்தபைரவாய நம: 36 உன்மத்த பைரவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(6) ஓம் கபாலபைரவாய நம: 37 கபால பைரவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(7) ஓம் பீஷணபைரவாய நம: 38 பீஷண பைரவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

(8) ஓம் ஸம்ஹார பைரவாய நம: 39 ஸம்ஹார பைரவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி தர்ப்பயாமி நம:

இந்த முறைப்படி அஷ்ட பைரவர்களை உபசரித்து, பூஜித்து, புஷ்பம் ஸமர்ப்பித்து நான்காவது ஆவரண பூஜையை நிறைவு செய்ய வேண்டும்.

இனி, பூபுரத்தில் கிழக்குத் துவங்கி,

(1) ஓம் லம் இந்த்ராய நம: 40
(2) ஓம் ரம் அக்னயே நம: 41
(3) ஓம் மம் யமாய நம: 42
(4) ஓம் க்ஷம் நிர்ருதயே நம: 43
(5) ஓம் வம் வருணாய நம: 44
(6) ஓம் யம் வாயவே நம: 45
(7) ஓம் கும் குபேராய நம: 46
(8) ஓம் ஹம் ஈசானாய நம: 47

இந்த்ர ஈசான மத்தியில்,

(9) ஓம் ஆம் ப்ரும்ஹணே நம: 48

வருண நிர்ருதி மத்தியில்

(10) ஓம் ஹ்ரீம் அநந்தாய நம: 49

இவ்வாறாக தஸதிக்பாலர்களைப் பூஜித்து அர்ச்சிக்க வேண்டும். இது தான் பஞ்சம (ஐந்தாவது) ஆவரண பூஜை.

இனி, இந்த்ரனை பஞ்சம ஆவரண பூஜையில் பூஜித்ததற்குப் பக்கலில், வெளியிலேயே,

(1) ஓம் வம் வஜ்ராய நம: 50
(2) ஓம் ஷம் சக்தயே நம: 51
(3) ஓம் தம் தண்டாய நம: 52
(4) ஓம் க்கம் கட்காய நம: 53
(5) ஓம் பாம் பாசாய நம: 54
(6) ஓம் அம் அங்குசாய நம: 55
(7) ஓம் கம் கதாய நம: 56
(8) ஓம் த்ரிம் த்ரிசூலாய நம: 57
(9) ஓம் பம் பத்மாய நம: 58
(10) ஓம் கம் சக்ராய நம: 59

என்று அஸ்த்ரங்களைப் பூஜித்து மலர்களால் அர்ச்சிக்க வேண்டும்.

இது ஆறாவது ஆவரண பூஜை.

இவ்வாறு ஆவரண பூஜைகள் செய்த பிறகு தூப-தீப ஸம்ஸ்காரங்கள் செய்து பூஜித்து ஜபிக்க வேண்டும்.

புரச்சரணையில் 1 இலட்சம் ஜபம். எள், நீலமலர்கள் கொண்டு தஸாம்ஸ ஹோமம், அதில் தஸாம்ஸம் தர்ப்பண வைதீய போஜனம் சித்தி தரும்.

**மூல மந்த்ரம்:**

**ஓம் ஹ்ரீம் நமோ வாராஹி கோரே**
**ஸ்வப்னம் ட்ட: ட்ட:* ஸ்வாஹா**

"ட்ட: ட்ட:*" என்பதற்கு பதிலாக "ட்ட ட்ட" என்றும் ஒரு வகையாக உள்ளது. இந்த மந்திரத்துக்கான தியான ஸ்லோகமும் வேறானது.

**த்யான ஸ்லோகம்:**

ததோ த்யாயேத் கன-ச்யாமாம் த்ரிநேத்ராம் உன்னதஸ்தனீம்,
கோலாஸ்யாம் சந்த்ர பாலாம் ச தம்ஷ்ட்ரோத்ருத வசுந்தராம்.
கட்காங்குசௌ தக்ஷிணயோர் வாமயோஸ்சர்ம பாசகௌ,
அச்வாருடாஞ்ச கோலாஸ்யாம் நாநாலங்கார பூஷிதாம்.

தவிரவும் இன்னொரு பேதத்தில்,

**ஓம் ஹ்ரீம் நமோ வாராஹி அகோரே**
**ஸ்வப்னம் தர்சய ட்ட: ட்ட: ஸ்வாஹா**

என்ற மந்த்ரமும் வழக்கில் நலன் பயப்பதாய்த் திகழ்ந்து வருகிறது. 11 நாட்கள் 1100 முறை (கட்டிலில் உறங்கு முன்பு) ஜபம் செய்தால், 11 நாட்களுக்குள் கண்டிப்பாக மனதில் எழுந்துள்ள வினாவுக்கு விடைபிறக்கும், ஐயமில்லை.

## 3. அஷ்ட தஸாக்ஷரீ

அஸ்ய ஸ்ரீ ஸ்வப்ன வாராஹி மந்த்ரஸ்ய ஈச்வர ரிஷி: அனுஷ்டுப் சந்த: ஸ்ரீ ஸ்வப்ன வாராஹி .தேவதா, ஐம் பீஜம் ஹ்ரீம் சக்தி: டடடட ஸ்வாஹா கீலகம். ஸ்ரீ ஸ்வப்ன வாரஹி ப்ரஸாத ஸித்யர்த்தே ஜபே விநியோக:

**கர ந்யாஸம்/அங்க ந்யாஸம்:**

ஐம் - அங்குஷ்டாப்யாம் நம:
நமோ வாராஹி - தர்ஜனீப்யாம் நம:
அகோரே - மத்யமாப்யாம் நம:
ஸ்வப்னே - அநாமிகாப்யாம் நம:
டடடட - கனிஷ்டிகாப்யாம் நம:
ஸ்வாஹா - கரதலகரப்ஷ்டாப்யாம் நம:

| | |
|---|---|
| ஐம் | - ஹ்ருதயாய நம: |
| நமோ வாராஹி | - சிரஸே ஸ்வாஹா |
| அகோரே | - சிகாயை வஷட்: |
| ஸ்வப்னே | - கவசாயஹும் |
| டடடட | - நேத்ரத்ரயாய வௌஷட் |
| ஸ்வாஹா | - அஸ்த்ராய ∴பட் |

'பூர்புவஸ்ஸுவரோம் இதி திக்பந்த:'

**த்யான ஸ்லோகம்:**

நீலாஞ்ஜன கிரிச்யாமாம் மணிரத்ன விபூஷிதாம்.
அச்வாருடாஞ்ச வாராஹிம் பாசாங்குச தராம் சிவாம்.
காமரூபாம் மஹாதேவீம் கட்க கேடக தாரிணீம்
சதுர்புஜாம் தீக்ஷ்ணதம்ஷ்ட்ராம் தம்ஷ்ட்ராக்ரஸ்தவசுந்தராம்.
துஷ்டஸ்ம்ஹரணோத்யுக்தாம் ஸாதகானாம் வரப்ரதாம்.
சிரம் நிரந்தரம் பக்த்யா ஸமுபாஸே ஸனாதனீம்.

**மந்த்ரம்:**

**ஐம் ஹ்ரீம் நமோ வாராஹி**
**அகோரே ஸ்வப்னே டடடட* ஸ்வாஹா**

'ட*' வை அழுத்திச் சொல்ல வேண்டும்.

**ப்ரார்த்தனை செய்ய வேண்டிய ஸ்லோகம்:**

நமஸ்தே ஸ்வப்ன வாராஹி ஸ்வப்னே கதய மே ரிபோ:
மஹாபயம் ச ஜயை பக்தே மயி க்ருபாம் குரு.
ப்ரஸஹ்ய பீடயேத் க்ஷிப்ரம் யோ யதா ஸாத்யதே மயா.
பாசபத்தம் நுத க்ஷிப்ரம் சித்தமாகர்ஷயாங்குசாத்.
துக்கம் வாரய கேடேன மதீய மதி துஸ்தரம்.
ச்சிந்தி: ந: கட்கதோ ம்ருத்யும் கதயஸ்வ சுபாசுபம்
ஸ்வயமாகத்ய ந: ஸாத்ய: ப்ரணம்யாக்ஞாம் கரோத்வயம்.

ஸ்வப்ன வாராஹி மந்த்ரத்தைப் பிரயோகமாகப் பயன்படுத்தும் போது ஒரு லக்ஷம் ஜெபமும், பத்தாயிரம் ஹோமும் செய்யவேண்டும்.

நல்ல எள்ளினாலும், செந்தாமரை புஷ்பத்தாலும் ஹோமம் செய்யவேண்டும். தாமரை புஷ்பத்தை பிய்த்து இதழ்களாக ஹோமம் செய்யக்கூடாது. யந்திர பூஜையில்

1. உச்சாடணி
2. உச்சாடனேஸ்வரீ
3. சோஷணி
4. சோஷனேஸ்வரீ
5. மாரணீ
6. மாரணேஸ்வரீ
7. பீஷணீ
8. பீஷணேஸ்வரீ
9. தாராசினி
10. தாராசனேஸ்வரீ
11. காம்பினி
12. காம்பனேஸ்வரீ
13. அர்ஜினா விவர்த்தினி
14. அர்ஜினாவிவர்தனேஸ்வரீ
15. வஸ்து ஜடஜேஸ்வரீ
16. ஸர்வஸம்பத் தனேஸ்வரீ

இவர்களை பூஜை செய்யவேண்டும். இவர்களை பூஜிக்காமல் சொப்பன வாராஹி தேவியைப் பூஜிக்கக்கூடாது.

**தர்ப்பணம்:**

இந்த ஸ்வப்ன வாராஹி தேவியின் மந்த்ரம் சித்தியாகச் செய்யும் தர்ப்பணத்தை இளநீரால்தான் செய்யவேண்டும். புண்ணிய தீர்த்தமானால் அதில் தர்ப்பணம் செய்து புண்ணிய தீர்த்தத்தில் கலந்து விட வேண்டும். மற்ற வாராஹி தேவிகளுக்குத் தர்ப்பண விதிகள் தனியாக இருந்தாலும் இளநீர் ஒரு சிறப்பான தர்ப்பண தீர்த்தம். தேங்காய்த் தண்ணீரைப் பயன்படுத்தக் கூடாது. இளநீர் தீர்த்தத்தை மட்டுமே பயன்படுத்த வேண்டும்.

வாராஹி ஜெப சித்திக்கு சுவாசினி பூஜை அவசியம். சுவாசினி பூஜையில் மாதுளம்பழம், முழு உளுந்து வடை, தேன், இளநீர், சர்க்கரைவள்ளிக் கிழங்கு, வள்ளிக் கிழங்கு, ஆள்வள்ளிக் கிழங்கு இவைகளைச் சிறப்பாகப் பயன்படுத்தவேண்டும்.

பொதுவாக எந்த தேவிக்கு எது எது விருப்பமோ, அவைகள் சுவாசினி பூஜையில் சேர்க்க வேண்டும் என்று சித்தர்பிரான் சொல்லுவார்கள்.

## 3. அச்வாரூடா தேவி

அச்வாரூடாம்பா ஸ்ரீமத் ராஜராஜேஸ்வரியின் குதிரைப் படைத் தலைவி. மஹாதேவியின் கையில் இருக்கும் ஆயுதங்கள் பல. இதில் பாசமென்னும் ஆயுதமும் ஒன்று, இந்தப் பாசத்தில் இருந்து, அச்வாரூடாவை தேவி படைத் தருளினாள். இந்தக் கோலம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. அச்வாரூடாம்பா குதிரையில் இவர்ந்து வருபவள். இவளைச் சூழ்ந்து குதிரைப் படைகள் எப்போதும் கூடவே இருக்கும். இவள் குதிரையை விட்டு எப்பொழுதும் இறங்காத நிலையிலேயே இருப்பாள். குதிரை மீது எப்பொழுதும் அமர்ந்து விளங்குவதால், இவளை அச்வ ஆருடா என்று சொல்லுகிறோம். இவளுடைய குதிரை, மற்றவர்களை வெல்லும் வல்லமை பெற்றது. ஆனால், மற்றவர்களால் எக்காலத்தும் வெல்ல முடியாதது. இக்குதிரையை அபராஜிதம் என்பர்.

இந்தத் தேவியின் உபாஸனை ஸ்ரீ வித்யையின் ஓர் அங்கம். கார்ய சித்திகளின் பொருட்டு, தனித்து உபாஸனை செய்வதும் உண்டு. இவள் கார்ய வெற்றி தருபவள். அரசாங்க காரியங்களை நிறைவேற்றி வைப்பாள்; எதிர்ப்பில் வெற்றி தருவது இவளுக்குக் கைவந்த கலை. இவளது குதிரை பாய்வதற்குத் தயார் நிலையிலேயே இருக்கும். இவள் கடிவாளங்களை இழுத்துப் பிடித்துக் கொண்டிருப்பவள். இவளது அபராஜிதம் என்ற போர்க் குதிரையைப் பூஜித்து விட்டு, இவளைப் பூஜிப்பது கார்ய வெற்றிக்குக் கொடி கட்டியது போலாகும். ஸ்ரீ வித்யையில் உபதேசம் பெற்றவர்கள்தான். இதை உபதேசம் செய்ய அருகதையானவர்கள். இந்த தேவி ராஜ்யபாரம் ஏற்றவர்களுக்கு, அவர்களுடைய பதவி, பெருமை, புகழ், சம்பத், தலைமை ஆகியவைகளைக் காப்பவள்-காத்துத் தருபவள்.

அச்வாரூடா ஜபத்தை த்ரிசந்தியில் ஜபம் செய்ய சித்தியாகும். தனிதீபம் ஏற்றி வைத்துக் கொண்டு, அதில் ஏக முகமாய் பிரகாஸிக்கச் செய்து, தேவி சிவப்பு குதிரையில் வருபவளாயும், பூரண அலங்காரங்களுடன் இருப்பவளாயும், ஸகல பொன்னாபரணங்களை அணிந்தவளாயும், எல்லா ஜனங்களையும் வசீகரணம் செய்பவளாயும், தக்ஷிணா தேவியாகவும், யௌவனத்தின் ஆரம்ப நிலையில் இருப்பவளாயும், நீலக்கண்ணியாகவும், எப்போதும் உபாஸகர்களுக்கு பிரஸன்ன முகத்தோடு விளங்கி இருப்பவளாக தியானம் செய்து ஜபிக்க வேண்டும். இப்படி தியானம் செய்து

ஜபம் செய்தால், அச்வாரூடாம்பா ஜபிப்பவர்களை ராஜ்ய புருஷர்களாயும் ராஜாங்க கார்ய பிரமுகர்களாயும் ஆக்கி வைப்பாள்.

## 4. அச்வாரூடா மஹா மந்த்ரம்:

அஸ்ய ஸ்ரீ அச்வாரூடாம்பா - மஹா மந்த்ரஸ்ய -ஸ்வச்சானந்த பைரவ ரிஷி: காயத்ரீ சந்த: ஸ்ரீ அச்வாரூடாம்பா தேவதா ஆம் பீஜம் ஹ்ரீம் சக்தி: க்ரோம் கீலகம் அச்வாரூடாம்பா ப்ரஸாத - ஸித்யர்த்தே ஜபே விநியோக:

**கர ந்யாஸம்/அங்க ந்யாஸம்:**

ஆம் - அங்குஷ்டாப்யாம் நம:
ஹ்ரீம் - தர்ஜனீப்யாம் நம:
க்ரோம் - மத்யமாப்யாம் நம:
ஏஹியேஹி - அநாமிகாப்யாம் நம:
பரமேச்வரி - கனிஷ்டிகாப்யாம் நம:
ஸ்வாஹா - கரதல கரப்ருஷ்டாப்யாம் நம:
ஆம் - ஹ்ருதயாய நம:
ஹ்ரீம் - சிரஸே ஸ்வாஹா
க்ரோம் - சிகாயை வஷட்:
ஏஹியேஹி - கவசாயஹும்
பரமேச்வரி - நேத்ரத்ரயாய வௌஷட்
ஸ்வாஹா - அஸ்த்ராய ஃபட்

ஓம் பூர்புவஸ்வரோம் இதி திக்பந்த:

என்றபடி கர - அங்காதி நியாஸங்களைச் செய்ய வேண்டும்.

**த்யானம்:**

அச்வாரூடா கராக்ரே நவகனகமயீம் வேத்ரயக்ஷீம் ததானா
தக்ஷீணேனானாயந்தீ ஸ்புரிததனுலதா பாச பத்தான் ஸ்வஸாத்யான்.
தேவீ நித்யப்ரஸன்னா சசிசகலதரா ஸா த்ரிநேத்ராபிராமா,
தத்யாதாத்யாநவத்யா ஸகல சுகவர ப்ராப்தி ஹ்ருத்யாம் ஸ்ரீயம் நம:

**மந்த்ரம்:**

ஆம் ஹ்ரீம் க்ரோம்
ஏஹியேஹி பரமேச்வரி ஸ்வாஹா

குறிப்பு:

மந்த்ர பேதத்தில், 'ஆம் ஹ்ரீம் க்ரோம் ஏஹி பரமேச்வரி ஸ்வாஹா' என்றும் உள்ளது. இது ஜெய துர்க்கா

பீடத்தில் வழக்கில் சிறப்பாக உள்ள மந்திரம்; குரு பரம்பரையில் பல காலமாய் பலித்துக் கொண்டு பலன்களை அள்ளித் தந்து வரும் மந்திரமும் கூட. இதனை ஏழு லட்சம் ஜெபம் செய்ய சித்தி தரும்.

## 5. அச்வாரூடா தஸாக்ஷரீ, (மேரு தந்த்ரம்):

அஸ்ய ஸ்ரீ தஸாக்ஷரீ அச்வாரூடா - மந்த்ரஸ்ய- ப்ரும்மா ரிஷி: விராட் சந்த: தஸாக்ஷரீ அச்வாரூடாம்பா தேவதா அச்வாரூடாம்பா ப்ரஸாத - ஸித்யர்த்தே ஜபே விநியோக:

கர ந்யாஸம்/அங்க ந்யாஸம்:

ஓம் ஏஹி - அங்குஷ்டாப்யாம் நம:
ஓம் பரமேச்வரி - தர்ஜனீப்யாம் நம:
ஓம் ஸ்வாஹா - மத்யமாப்யாம் நம:
ஓம் ஏஹி - அநாமிகாப்யாம் நம:
ஓம் பரமேச்வரி - கனிஷ்டிகாப்யாம் நம:
ஓம் ஸ்வாஹா - கரதல கரப்ருஷ்டாப்யாம் நம:

ஓம் ஏஹி - ஹ்ருதயாய நம:
ஓம் பரமேச்வரி - சிரஸே ஸ்வாஹா
ஓம் ஸ்வாஹா - சிகாயை வஷட்:
ஓம் ஏஹி - கவசாயஹூம்
ஓம் பரமேச்வரி - நேத்ரத்ரயாய வௌஷட்
ஓம் ஸ்வாஹா - அஸ்த்ராய ஃபட்
என்று கர - அங்காதி ந்யாஸங்கள் செய்ய வேண்டும்.

த்யானம்:

அச்வாரூடாம் சந்த்ர பாலாம் த்ரயக்ஷாம் பாசேன ஸாத்யகம்,
பத்வானயந்தீம் வாமேன தக்ஷே கனக வேத்ரிகாம்.

மந்த்ரம்:

**ஓம் ஏஹி பரமேச்வரி ஸ்வாஹா**

புரச்சரணையில் 10,000 ஜபம் செய்து நெய்யால் தஸாம்ஸ ஹோமம்.

## 6. ஏகாதஸாக்ஷர அச்வாரூடா:

அஸ்ய ஸ்ரீ ஏகாதஸாக்ஷர அச்வாரூடா - மந்த்ரஸ்ய, ப்ரும்மா ரிஷி: விராட் சந்த: ஏகாதஸாக்ஷர அச்வாரூடாம்பா தேவதா, அச்வாரூடாம்பா ப்ரஸாத ஸித்யர்த்தே - ஜபே விநியோக:

**கர ந்யாஸம்/அங்க ந்யாஸம்:**

ஹ்ராம் - அங்குஷ்டாப்யாம் நம:
ஹ்ரீம் - தர்ஜனீப்யாம் நம:
ஹ்ரோம் - மத்யமாப்யாம் நம:
ஹ்ரைம் - அநாமிகாப்யாம் நம:
ஹ்ரெளம் - கனிஷ்டிகாப்யாம் நம:
ஹ்ர - கரதல கரப்ருஷ்டாப்யாம் நம:

ஹ்ராம் - ஹ்ருதயாய நம:
ஹ்ரீம் - சிரஸே ஸ்வாஹா
ஹ்ரோம் - சிகாயை வஷட்
ஹ்ரைம் - கவசாயஹூம்
ஹ்ரெளம் - நேத்ரத்ரயாய வெளஷட்
ஹ்ர - அஸ்த்ராய ஃபட்

என்ற பீஜங்களால் ஷட் கர - அங்க நியாஸாதிகள் செய்ய வேண்டும்.

**த்யான ஸ்லோகம்:**

தஸாக்ஷர மந்திரத்திற்கு உள்ளதையே கொள்ள வேண்டும்.

**மந்த்ரம்:**

**ஓம் ஹ்ரீம் ஏஹி பரமேச்வரி ஸ்வாஹா**

## 7. த்ரயோதஸாக்ஷர அச்வாரூடா (மந்த்ர ரத்ன மஞ்ஜூஷா):

இந்த மந்த்ரத்தின் ரிஷி, சந்தஸ் ஆகியன தஸாக்ஷர அச்வாரூடாவின் ரிஷி - சந்தஸுக்கு உள்ளது போலவே உள்ளது.

மந்த்ரத்தையே ந்யாஸமாகச் செய்து கொள்ள வேண்டும்.

**த்யானம்:**

*ரக்தாமச்வாதிரூடாம் சசி தர ஸகலாபத்த மௌளிம் த்ரிநேத்ராம்,*
*பாசேனாபத்ய ஸாத்யாம் ஸ்மர சர விவசாம் தக்ஷிணேநாநயந்தீம்.*
*ஹஸ்தேனான்யேன வேத்ரம் வர கனக மயம் தாரயந்தீம் மனோக்ஞயாம்,*
*தேவீம் த்யாயேதஜஸ்ரம் குச பர நமிதாம் திவ்ய ஹாராபிராமாம்.*

**மந்த்ரம்:**

**ஓம் ஆம் ஹ்ரீம் க்ரோம் ஏஹி பரமேச்வரி ஸ்வாஹா**

புரச்சரணையில் 5 இலட்சம் ஜபம் மற்றும் நெய்யில் தஸாம்ஸ ஹோமம்.

## 8. சதுர்தஸாக்ஷர அச்வாரூடா:

தஸாக்ஷரீ அச்வாரூடா மந்த்ரத்துக்கு உள்ளது போன்றே ரிஷி - சந்தஸ் என்று கொள்ளவும்.

**கர ந்யாஸம்/அங்க ந்யாஸம்:**

ஓம் - அங்குஷ்டாப்யாம் நம:
ஓம் - தர்ஜனீப்யாம் நம:
ஓம் - மத்யமாப்யாம் நம:
ஹ்ரீம் - அநாமிகாப்யாம் நம:
ஓம் - கனிஷ்டிகாப்யாம் நம:
ஓம் - கரதல கரப்ருஷ்டாப்யாம் நம:

ஓம் - ஹ்ருதயாய நம:
ஓம் - சிரஸே ஸ்வாஹா
ஓம் - சிகாயை வஷட்:
ஹ்ரீம் - கவசாயஹும்
ஓம் - நேத்ரத்ரயாய வௌஷட்
ஓம் -அஸ்த்ராய ஃபட்

இந்த அக்ஷரங்களால் ஷட் அங்க ந்யாஸங்கள் செய்து கொள்ள வேண்டும்.

**த்யானம்:**

அச்வாரூடாம் சந்த்ர - பாலாம் - த்ரயக்ஷாம் பாசேன ஸாத்யகம்,
பத்வானயந்தீம் வாமேன தக்ஷே - கனக - வேத்ரிகாம்.

**மந்த்ரம்:**

**ஓம் ஓம் ஹ்ரீம் க்ரோம் ஓம் ஏஹி பரமேச்வரி ஸ்வாஹா**

புரச்சரணையில் 5 இலட்சம் ஜபம் செய்து கொள்ள் வேண்டும்.

## 9. ஏக-விம்ஸத்யக்ஷர அச்வாரூடா(மேரு தந்த்ரம்):

**த்யானம்:**

வ்ருஷாரூடாம் பால சந்த்ராம் த்ரிநேத்ராம் சசி ஸந்நிபாம்.

தததீம் சூல டமரும் மஹாஹி வலயாம் பஜே.

குறிப்பு: இதில் அம்பாள் அச்வாரூடா ரிஷபத்தில் இவர்ந்து வருகிறாள். இவளே மாஹேச்வரியாக இருக்கிறாள்.

**மந்த்ரம்:**

**ஓம் ஹ்ரீம் நமோ பகவதி மாஹேச்வரி ஏஹிபரமேச்வரி ஸ்வாஹா**

புரச்சரணையில் 21 இலட்சம் ஜபம் செய்து நெய்யில் தோய்த்த வில்வ- பத்ரங்களால் தஸாம்ஸ ஹோமம் செய்ய வேண்டும்.

பொதுவாகவே, அச்வாரூடா மந்த்ரங்களை அச்வாலயங்களில் இருந்து ஜெபிப்பது சீரிய சித்தி தரும் என்பர் என் குருநாதர். விழிப்பு நேரங்களில் ஜெபமும், உறக்க காலங்களில் ஹோமமும், நினைத்த காரியத்தை விரைவில் நிறைவேற்றி வைக்கும்.

சிறந்த ஜப மாலை: சிறந்த ஜப மாலை நற்பவளம், சிவப்புக் கல் மாலை, ருத்ராக்ஷம், தங்கமணி மாலைகளும் ஏற்றவையே.

புஷ்பங்கள்: செந்தாமரை, மல்லிகை புஷ்பங்கள் சிறப்பு.

ஹோமசமித்து: ஹோமசமித்து என்றால், அத்தி, காசு, ஆல் சிறந்தன. செவ்வரளி, தாமரை ஆகிய்ன சிறந்த ஹோம புஷ்பங்கள்.

சிறப்பு ஆகுதிகள்: தேன், குடமது, நெய்.

வஸ்த்ரங்கள்: செம்பட்டு, நார்ப்பட்டு, வெண்பட்டு, சித்திர வஸ்த்ரங்கள் சிறந்த வஸ்த்ரங்கள்.

அச்வாரூடா மந்த்ரத்தை முறைப்படி உபதேசம் செய்து கொள்ள வேண்டும். பதினெட்டில் துவங்கி, பதினெட்டு பதினெட்டாகக் கூட்டிக் கொண்டு போய், ஜெபத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். எடுத்த உடனேயே அதிக ஜபம் செய்யக் கூடாது.

## 4. மஹா வாராஹி

### 10. நிக்ரஹ-ஸ்தம்பன மந்த்ரம்:

அஸ்ய ஸ்ரீ மஹா வாராஹி மந்த்ரஸ்ய தரணீ வாராஹ ரிஷி:, ப்ருஹதீ சந்த:, மஹா வாராஹி தேவதா, க்லௌம் பீஜம் ஐம் சக்தி:, ஹ்ரீம் கீலகம், மம கார்யம் ஸித்யர்த்தே வாராஹி தேவி மந்த்ர ஜெப ஸித்யர்த்தே மமகுல சந்தோஷனார்த்தே ஜெபே விநியோக:

**கர ந்யாஸம்/அங்க ந்யாஸம்:**

ஓம் ஐம் க்லௌம் ஓம் நமோ பகவதி வார்த்தாளி வார்த்தாளி
- அங்குஷ்டாப்யாம் நம:

வாராஹி வாராஹி வராஹமுகி - தர்ஜனீப்யாம் நம:

அந்தே அந்தினி நம: ருந்தே-ருந்தினி நம: - மத்யமாப்யாம் நம:

பஞ்ஜே பஞ்ஜினி நம: மோஹே-மோஹினி நம: -அநாமிகாப்யாம் நம:

ஸர்வதுஷ்டப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம் வாக்சித்தசக்ஷுர் முககதி

ஜிஹ்வாஸ்தம்பம் குரு குரு – கனிஷ்டிகாப்யாம் நம:

சீக்ரம் வச்யம் குரு குரு - கரதல கரப்ருஷ்டாப்யாம் நம:

ஓம் ஐம் க்லௌம் ஓம் நமோ பகவதி வார்த்தாளி வார்த்தாளி
- ஹ்ருதயாய நம:

வாராஹி வாராஹி வராஹமுகி - சிரஸே ஸ்வாஹா

அந்தே அந்தினி நம: ருந்தே-ருந்தினி நம: - வஷட் நம:

பஞ்ஜே பஞ்ஜினி நம: மோஹே-மோஹினி நம: - கவசாயஹும்

ஸர்வதுஷ்டப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம் - வாக்சித்தசக்ஷுர் முககதி
- ஜிஹ்வாஸ்தம்பம் குரு குரு - நேத்ரத்ரயாய வௌஷட்

சீக்ரம் வச்யம் குரு குரு - அஸ்த்ராய ஃபட்

ட்ட ட்ட ட்ட ட்ட ஹும் பட் ஸ்வாஹா இதி திக்பந்த:

**த்யான ஸ்லோகம்:**

வந்தே வாராஹவக்த்ராம் வரமணி மகுடாம் -
வித்ருமச்ரோத்ரபூஷாம்,
ஹாரக்ரைவேயத்துங்கஸ்தனபரநமிதாம் - பீதகௌசேய வஸ்த்ராம்.
தேவீம் தக்ஷோர்த்வ ஹஸ்தே முஸலமத -
வரம் லாங்கலம் வா கபாலம்.
வாமாப்யாம் தாரயந்தீம் குவலயகலிதாம் -
ச்யாமளாம் சுப்ரஸன்னாம்.

லமித்யாதி பஞ்ச பூஜை செய்யவும்.

## மூல மந்த்ரம்:

ஓம் ஐம் க்லௌம் ஓம் நமோ பகவதி, வார்த்தாளி வார்த்தாளி, வாராஹி வாராஹி, வராஹமுகி வராஹமுகி, அந்தே அந்தினி நம:, ருந்தே ருந்தினி நம:, பஞ்ஜே பஞ்ஜினி நம:, ஸ்தம்பே ஸ்தம்பினி நம:, மோஹே மோஹினி நம:, ஸர்வதுஷ்டப்ரதுஷ்டானாம், ஸர்வேஷாம், வாக்சித்த சக்ஷுர் முககதி ஜிஹ்வா ஸ்தம்பம் குரு குரு, சீக்ரம் வச்யம் குரு குரு, ட்ட ட்ட ட்ட ட்ட ஹும் பட் ஸ்வாஹா.

நடு இரவில் 1 இலட்சம் ஜபம் செய்து (புரச்சரணை) நியாஸங்கள், பஞ்ச பூஜை செய்து, ஜெபத்தை ஸ்ரீ வாராஹி தேவிக்கே அர்ப்பணம் செய்க. ப்ரயோகம் மற்றும் ப்ரயோக அர்த்தம் முதலியவற்றை, அவரவர் குருமார்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவும்.

மந்த்ரத்தில் சில மாறுபாடுகள் உண்டு. அப்படி மாற்றம் உள்ள மந்த்ரம்-

ஓம்-ஐம், ஹ்ரீம்-ஸ்ரீம், ஐம்-க்லௌம்-ஐம், நமோ பகவதி, வார்த்தாளி வார்த்தாளி, வாராஹி வாராஹி, வராஹமுகி வராஹமுகி, அந்தே அந்தினி நம:, ருந்தே ருந்தினி நம:, ஸ்தம்பே ஸ்தம்பினி நம:, ஸர்வதுஷ்ட ப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம் ஸர்வவாக் சித்த சக்ஷுர் முக கதி ஜிஹ்வா ஸ்தம்பனம் குரு குரு, சீக்ரம் வச்யம் ஐம்-க்லௌம் ட: ட: ட: ட: ஹும் அஸ்த்ராய பட்.

## 11. மஹா வாராஹி

அஸ்ய ஸ்ரீ மஹா வாராஹி மந்த்ரஸ்ய சிவ ரிஷி:, ஜகதீச் சந்த:, வாராஹி தேவதா:, க்லௌம் பீஜம்:, ஸ்வாஹா சக்தி - வாராஹி மந்த்ர ஸித்யர்த்தே ஜபே விநியோக:

### கர ந்யாஸம்/அங்க ந்யாஸம்:

ஓம் நமோ பகவதி வார்த்தாளி வார்த்தாளி - அங்குஷ்டாப்யாம் நம:
வாராஹி வாராஹி - தர்ஜனீப்யாம் நம:
வராஹமுகி வராஹமுகி - மத்யமாப்யாம் நம:
அந்தே அந்தினி நம: - அநாமிகாப்யாம் நம:
ருந்தே ருந்தினி நம: கனிஷ்டிகாப்யாம் நம:
ஜம்பே ஜம்பினி நம:, மோஹே - மோஹினி நம:, ஸ்தம்பே ஸ்தம்பினி நம:, ஸர்வதுஷ்ட ப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம் ஸர்வ வாக் சித்த சக்ஷுர் முக கதி ஜிஹ்வா ஸ்தம்பனம் குரு குரு, சீக்ரம் வச்யம் குரு

குரு, ஐம் க்லௌம் ட்ட: ட்ட: ட்ட: ட்ட: ஹூம் பட் ஸ்வாஹா
- கரதல கரப்ருஷ்டாப்யாம் நம:

ஓம் நமோ பகவதி வார்த்தாளி வார்த்தாளி - ஹ்ருதயாய நம:
வாராஹி வாராஹி - சிரஸே ஸ்வாஹா
வராஹமுகி வராஹமுகி - சிகாயை வஷட்:
அந்தே அந்தினி நம: - கவசாயஹூம்
ருந்தே ருந்தினி நம: - நேத்ரத்ரயாய வௌஷட்
ஜம்பே ஜம்பினி நம:, மோஹே மோஹினி நம:, ஸ்தம்பே ஸ்தம்பினி நம:, ஸர்வதுஷ்ட ப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம் - ஸர்வ வாக் சித்த சக்ஷுர் முக கதி ஜிஹ்வா ஸ்தம்பனம் - குரு குரு, சீக்ரம் வச்யம் குரு குரு, ஐம் க்லௌம் ட்ட: ட்ட: - ட்ட: ட்ட: ஹூம் பட் ஸ்வாஹா.
- அஸ்த்ராய ஃபட்

மேற்சொன்னவாறு மந்த்ரத்தை பிரித்து கர அங்காதி ந்யாஸங்களைச் செய்து கொள்ள வேண்டும்.

**த்யான ஸ்லோகம்:**

ப்ரத்யக்ராருண ஸங்காஸ பத்மாந்தர்கத வாஸினீம்.
இந்த்ர நீல மஹாதேஜ: ப்ரகாசாம் விச்வமாதரம்.
ருண்டம் ச முண்டமாலாட்ய நவரத்ன விபூஷிதாம்.
அனர்க்ய ரத்ன கடித முகுடஸ்ரீ விராஜிதாம்.
கௌசேயார் கோருகாம் சாரு ப்ரவாள மணி பூஷணாம்.
ஹலேன முஸலேனாபி வரதேனாபயேன ச.
விராஜித சதுர்பாஹூம் கபிலாக்ஷீம் சுமத்யமாம்.
நிதம்பினீ உத்பலாபாம் கடோரகன ஸத்குசாம்.

**மந்த்ரம்:**

ஓம் நமோ பகவதி வார்த்தாளி வார்த்தாளி, வாராஹி வாராஹி வராஹமுகி வராஹமுகி அந்தே அந்தினி நம: ருந்தே ருந்தினி நம: ஜம்பே ஜம்பினி நம: மோஹே மோஹினி நம:, ஸ்தம்பே-ஸ்தம்பினி நம:, ஸர்வதுஷ்ட ப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம் ஸர்வ வாக் சித்த சக்ஷுர் முக கதி ஜிஹ்வா ஸ்தம்பனம் குரு குரு, சீக்ரம் வச்யம் குரு குரு, ஐம் க்லௌம் ட்ட: ட்ட: ட்ட: ட்ட: ஹூம் பட் ஸ்வாஹா.

## 12. ப்ருஹத் வாராஹி

அஸ்ய ஸ்ரீ ப்ருஹத் வாராஹி மந்த்ரஸ்ய - ப்ரும்மா ரிஷி: காயத்ரீ சந்த:, ஸ்ரீப்ருஹத் வாராஹி தேவதா, க்லௌம் பீஜம், ஐம் சக்தி:, ட்ட: ட்ட: ட்ட: ட்ட: கீலகம், ஸ்ரீ ப்ருஹத் வாராஹி ப்ரஸாத - ஸித்யர்த்தே ஜபே விநியோக:

**கர ந்யாஸம்/அங்க ந்யாஸம்:**

ஐம் க்லௌம் ஐம் ஓம் நம: பகவதி வார்த்தாளி வார்த்தாளி
- அங்குஷ்டாப்யாம் நம:

வாராஹி வாராஹி - தர்ஜனீப்யாம் நம:

வராஹமுகி வராஹமுகி - மத்யமாப்யாம் நம:

அந்தே அந்தினி நம: - அநாமிகாப்யாம் நம:

ருந்தே ருந்தினி நம: - கனிஷ்டிகாப்யாம் நம:

ஜம்பே ஜம்பினி நம: - கரதல கரப்ருஷ்டாப்யாம் நம:

ஐம் க்லௌம் ஐம் ஓம் நம: பகவதி வார்த்தாளி வார்த்தாளி
- ஹ்ருதயாய நம:

வாராஹி வாராஹி - சிரஸே ஸ்வாஹா

வராஹமுகி வராஹமுகி - சிகாயை வஷட்:

அந்தே அந்தினி நம: - கவசாயஹூம்

ருந்தே ருந்தினி நம: - நேத்ரத்ரயாய வௌஷட்

ஜம்பே ஜம்பினி நம: - அஸ்த்ராய ஃபட்

இவ்வாறு ஷட் கர - அங்காதி ந்யாஸங்கள் செய்ய வேண்டும்.

**த்யான ஸ்லோகம்:**

ரக்தாம்புஜே ப்ரேத வராஸனஸ் தாமர்கோருகா மார்படிகா
- ஸனஸ்தாம்.

தம்ட்ரோல்லஸத் போத்ரி முகாரவிந்தாம் கோடீர ஸஞ்சின்ன
- ஹிமான்சுரேகாம்.

ஹலம் கபாலம் தததீம் கராப்யாம் வாமே தராப்யாம்
- முஸலேஷ்டதௌ ச.

ரக்தாம்பராம் ரக்தபடோத்தரீயாம் ப்ரவாள கர்ணாபரணாம்
- த்ரிநேத்ராம்.

ச்யாமாம் ஸமஸ்தாபரணஸ்ரகாட்யாம் வாராஹி ஸஞ்யாம்
- ப்ரணதோஸ்மி நித்யம்.

